ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஆழ்வாராசாரியர்கள்

அருளிச்செய்த

# நித்யாநுஸந்தாநம்

இஃது

ஸ்ரீபெரும்பூதூர்-ஸ்ரீ, உ, வே,

வித்வான்-வேங்கடநரசிம்மாசாரியராலும்,

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூளியாகிய

காஞ்சீபுரம், வித்வான்-

ராமஸ்வாமிநாயுடு அவர்களாலும்

பூர்வாசாரியர்கள் அருளிச்செய்த

வ்யாக்யாநங்களுக்கிணங்கப்

பரிசோதிக்கப்பட்டு,

சென்னபட்டணம்:

பத்தி-இராமாநுஜுலுநாயுடு அவர்கள்

குமாரர்களது

ஸ்ரீநிகேதந அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது,

1893.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# சூசிகை.




| ப்ரபந்தம். | பக்கம். |
| --- | --- |
| ர்கள் ... ... ... | ௧ |
| பல்லாண்டு ... ... | ௨ |
| திருப்பள்ளியெழுச்சி ... ... | ௫ |
| திருப்பாவை ... ... ... | ௧௧ |
| நீராட்டம் ... ... ... | ௧௬ |
| திருமஞ்சநகாலத்தில் சேர்த்து அநுஸந்திக்கும் பாட்டுகள் ... ... ... | ௨0 |
| பூச்சூடல் ... ... ... | ௨௧ |
| காப்பிடல் ... ... ... | ௨௩ |
| சென்னியோங்கு ... ... | ௨௪ |
| அமலனாதிபிரான் ... .. | ௨௭ |
| வாரணமாயிரம் ... ... ... | ௨௯ |
| கண்ணிநுண்சிறுத்தாம்பு ... ... | ௩௨ |
| கோயில்திருவாய்மொழி ... ... | ௩௫ |
| இராமாநுசநூற்றந்தாதி ... ... | ௫௮ |
| உபதேசரத்நமாலை ... ... | ௭௨ |
| திருவாய்மொழிநூற்றந்தாதி ... | ௮௩ |
| ஆர்த்திப்ரபந்தம் ... ... | ௯௬ |
| ஞாநஸாரம் ... ... ... | ௧0௭ |
| ப்ரமேயஸாரம் ... ... ... | ௧௧௬ |
| ஸப்தகாதை ... ... ... | ௧௧௭ |
| வாழித்திருநாமம் ... ... | ௧௨௩ |
| சாற்றுமுறை... ... ... | ௧௩௧ |
| திருநக்ஷத்ரத்தனியன்கள் ... ... | ௧௩௩ |




* இது அத்யாபகர்கள் நிறுத்துமிடங்களைக் குறிக்கும்.

※ இது இரட்டித்துச்சேவிக்கப்படும் பாசுரங்களைக் குறிக்கும்.





ஸ்ரீ:

    

ஆழ்வார்திருவடிகளேசரணம்.
ஜீயர்திருவடிகளேசரணம்.

——:0:——

## தனியன்கள்.

### மணவாளமாமுனிகள் தனியன்.

(நம்பெருமாள் அருளிச்செய்தது.)

శ్రీశైలేశదయాపాత్రం । ధీభక్త్యాదిగుణార్ణవమ్।
యతీన్ద్రప్రవణంవన్దే । రమ్యజామాతరంమునిమ్॥

ஸ்ரீசைலேஸதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்-
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

### குருபரம்பரையின் தனியன்.

(கூரத்தாழ்வானருளிச்செய்தது.)

లక్ష్మీనాథసమారమ్భాం । నాథయామునమధ్యమామ్।
అస్మదాచార్యపర్యన్తాం । వన్దేగురుపరమ్పరామ్॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்-
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

యోనిత్యమచ్యుతపదామ్బుజయుగ్మరుక్మ । వ్యామోహతస్తదితరాణితృణాయమేనే।
అస్మద్గురోర్భగవతోఽస్యదయైకసిన్ధోః । రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే॥

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணித்ருணாயமேநே-
அஸ்மத்குரோர்பகவதோஸ்யதயைகஸிந்தோ
ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே.

### நம்மாழ்வார் தனியன்.

(ஆளவந்தாரருளிச்செய்தது.)

మాతాపితాయువతయస్తనయావిభూతిః । సర్వంయదేవనియమేనమదన్వయానామ్।
ఆద్యస్యనఃకులపతేర్వకుళాభిరామం । శ్రీమత్తదఙ్ఘ్రియుగళంప్రణమామిమూర్ధ్నా॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம்-
ஆத்யஸ்யநகுலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா.

ஆழ்வார்கள் தனியன்.

(ஸ்ரீபராசரபட்டருளிச்செய்தது.)

భూతంసరశ్చమహదాహ్వయభట్టనాథ । శ్రీభక్తిసారకులశేఖరయోగివాహాన్ ।
భక్తాంఘ్రిరేణుపరకాలయతీన్ద్రమిశ్రాన్ । శ్రీమత్పరాఙ్కుశమునింప్రణతోస్మినిత్యమ్ ॥

பூதம்ஸரஸ்சமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹாந்।
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஸ்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம்ப்ரணதோஸ்மிநித்யம்.

---

பெரியாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

வேதஸாரமாகும்

# திருப்பல்லாண்டு.

## தனியன்கள்.

### பெரியாழ்வார் தனியன்.

(ஸ்ரீமந்நாதமுனிகளருளிச்செய்தது.)

గురుముఖమనధీత్యప్రాహవేదానశేషాన్ । నరపతిపరిక్లృప్తంశుల్కమాదాతుకామః ।
శ్వశురమమరవన్ద్యంరఙ్గనాథస్యసాక్షాత్ । ద్విజకులతిలకంతంవిష్ణుచిత్తంనమామి ॥

குருமுகமநதீத்ய ப்ராஹவேதாநசேஷாந்
நரபதிபரிக்லுப்தம் சுல்கமாதாதுகாம:-
ச்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்யஸாக்ஷாத்
த்விஜகுலதிலகந்தம் விஷ்ணுசித்தம்நமாமி.

(பாண்டியபட்டருளிச்செய்த தனியன்கள்.)

(நேரிசைவெண்பா.)

மின்னார்தடமதிள்சூழ்வில்லிபுத்தூரென்றொருகால் *
சொன்னார்கழற்கமலஞ்சூடினோம் * முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம் * கீழ்மையினிச்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

பாண்டியன்கொண்டாடப் பட்டர்பிரான்வந்தானென் *
ஈண்டியசங்கமெடுத்தூத * வேண்டிய
வேதங்களோதிவிரைந்து கிழியறுத்தான்
பாதங்கள்யாமுடையபற்று.

(வெண்செந்துறை.)

ஸ்ரீபல்லாண்டுபல்லாண்டு பல்லாயிரத்தாண்டு *
பல்கோடிநூறாயிரம்
மல்லாண்டதிண்டோள்மணிவண்ணா * உன்
சேவடி செவ்விதிருக்காப்பு. (க)

ஸ்ரீஅடியோமோடு நின்னோடும் பிரிவின்றியாயிரம்பல்லாண்டு *
வடிவாய்நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு *
வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு
படைபோர்புக்குமுழங்கு மப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே. (உ)

வாழாட்பட்டுநின்றீருள்ளீரேல் வந்துமண்ணுமணமுங்கொண்மின்*
கூழாட்பட்டுநின்றீர்களை யெங்கள்குழுவினில்புகுதலொட்டோம் *
ஏழாட்காலும்பழிப்பிலோம் நாங்கள், இராக்கதர்வாழ்*இலங்கை
பாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (ங)

ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந் தெங்கள்குழாம்புகுந்து *
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ *
நாடுநகரமும்நன்கறிய நமோநாராயணாயவென்று *
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் வந்துபல்லாண்டுகூறுமினே. (ச)

அண்டக்குலத்துக்கதிபதியாகி யசுரரிராக்கதரை *
இண்டக்குலத்தையெடுத்துக்களைந்த விருடிகேசன்றனக்குத்
தொண்டக்குலத்திலுள்ளீர்வந்தடிதொழு தாயிரநாமம்சொல்லிப் *
பண்டைக்குலத்தைத்தவிர்ந்து பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே. (ரு)

எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்ப னேழ்படிகால்தொடங்கி*
வந்துவழிவழியாட்செய்கின்றோம் * திருவோணத்திருவிழவில்
அந்தியம்போதிலரியுருவாகி யரியையழித்தவனைப் *
பந்தனைதீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே. (சு)

தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின் *
கோயிற்பொறியாலேயொற்றுண்டுநின் றுகுடிகுடியாட்செய்கின்றோம்
மாயப்பொருபடைவாணனை யாயிரந்தோளும்பொழிகுருதி
பாயச் * சுழற்றியவாழிவல்லானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (எ)

நெய்யிடைநல்லதோர்சோறும் நியதமுமத்தாணிச்சேவகமும் *
கையடைக்காயுங்கழுத்துக்குப்பூணொடு காதுக்குக்குண்டலமும் *
மெய்யிடநல்லதோர்சாந்தமுந்தந் தென்னைவெள்ளுயிராக்கவல்ல *
பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப் பல்லாண்டுகூறுவனே. (௮)

உடுத்துக்களைந்தநின்பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு *
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தனசூடுமித்தொண்டர்களோம் *
விடுத்ததிசைக்கருமந்திருத்தித் திருவோணத்திருவிழவில் *
படுத்தபைந்நாகணைப்பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (௯)

எந்நாளெம்பெருமானுன்றனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
அந்நாளே * அடியோங்களடிக்குடில் வீடுபெற்றுய்ந்ததுகாண் *
செந்நாள்தோற்றித் திருமதுரையுட்சிலைகுனித்தைந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே யுன்னைப்பல்லாண்டுகூறுதுமே. (௧0)

அல்வழக்கொன்றுமில்லாவணிகோட்டியர்கோன் * அபிமானதுங்கன்
செல்வனைப்போலத்திருமாலே நானுமுனக்குப்பழவடியேன் *
நல்வகையால்நமோநாராயணாவென்று நாமம்பலபரவிப் *
பல்வகையாலும்பவித்திரனே யுன்னைப்பல்லாண்டுகூறுவனே. (௧௧)

பல்லாண்டென்றுபவித்திரனைப்பரமேட்டியைச் * சார்ங்கமென்னும்
வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர்விட்டுசித்தன்விரும்பியசொல் *
நல்லாண்டென்றுநவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று *
பல்லாண்டும்பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே. (௧௨)

அடிவரவு.—பல், அடி, வாழ், ஏடு, அண்டம், எந்தை, தீ, நெய், உடுத்து, எந்நாள், அல்வழக்கு, பல்லாண்டு.

பெரியாழ்வார்திருவடிகளேசரணம்.

——:0:——

தொண்டரடிப்பொடியாழ்வார்

திருவாய்மலர்ந்தருளிய

வேதார்த்தஸாரமாகும்

# திருப்பள்ளியெழுச்சி.

## தனியன்கள்.

(திருமாலையாண்டான் அருளிச்செய்தது.)

తమేవమత్వాపరవాసుదేవం । రంగేశయంరాజవదర్హణీయమ్।
ప్రాబోధకీంయోఽకృతసూక్తిమాలాం । భక్తాఙ్ఘ్రిరేణుంభగవన్తమీడే॥

தமேவமத்வா பரவாஸுதேவம்
ரங்கேஶயம் ராஜவதர்ஹணீயம்-
ப்ராபோதகீம் யோக்ருதஸூக்திமாலாம்
பக்தாங்க்ரிரேணும் பகவந்தமீடே.

(திருவரங்கப்பெருமாளரையரருளிச்செய்தது.)

இருவிகற்ப நேரிசைவெண்பா.

மண்டங்குடியென்பர் மாமறையோர்மன்னியசீர் *
தொண்டரடிப்பொடி தொன்னகரம் * வண்டு
திணர்த்தவயற் றென்னரங்கத்தம்மானைப் * பள்ளி
யுணர்த்தும் பிரானுதித்தவூர்.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஶ்ரீ: கதிரவன்குணதிசைச் சிகரம்வந்தணைந்தான்
கனையிருளகன்றது காலையம்பொழுதாய் *
மதுவிரிந்தொழுகின மாமலரெல்லாம்
வானவரரசர்கள் வந்துவந்தீண்டி *
எதிர்திசைநிறைந்தன ரிவரொடும்புகுந்த
இருங்களிற்றீட்டமும் பிடியொடுமுரசும் *
அதிர்தலிலலைகடல் போன்றுளதெங்கும்
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (க)

கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக்
கூர்ந்ததுகுணதிசைமாருதமிதுவோ *
எழுந்தனமலரணைப்பள்ளிகொண்டன்னம்
ஈன்பனிநனைந்ததம்மிருஞ்சிறகுதறி *
விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய்
வெள்ளெயிறுறவதன்விடத்தினுக்கனுங்கி *
அழுங்கியவானையினருந்துயர்கெடுத்த
அரங்கத்தம்மா!பள்ளியெழுந்தருளாயே. (உ)

சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம்
துன்னியதாரகையின்னொளிசுருங்கிப் *
படரொளிபசுத்தனன்பனிமதியிவனோ
பாயிருளகன்றது பைம்பொழிற்கமுகின்

மடலிடைக்கீறிவண்பாளைகள்நாற
வைகறைகூர்ந்ததுமாருதமிதுவோ *
அடலொளிதிகழ்தருதிகிரியந்தடக்கை
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (௩)

மேட்டிளமேதிகள் தளைவிடுமாயர்கள்
வேய்ங்குழலோசையும்விடைமணிக்குரலும் *
ஈட்டியவிசைதிசைபரந்தன வயலுள்
இரிந்தனசுரும்பினம், இலங்கையர்குலத்தை
வாட்டியவரிசிலைவானவரேறே!
மாமுனிவேள்வியைக்காத்தவபிருதம்
ஆட்டியவ்வடுதிறலயோத்தியெம்மரசே!
அரங்கத்தம்மா!பள்ளியெழுந்தருளாயே. (௪)

புலம்பினபுட்களும் பூம்பொழில்களின்வாய்
போயிற்றுக்கங்குல் புகுந்ததுபுலரி *
கலந்ததுகுணதிசைக்கனைகடலரவம்
களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த *
அலங்கலந்தொடையல்கொண்டடியிணைபணிவான்
அமரர்கள்புகுந்தனராதலினம்மா! *
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில்
எம்பெருமான்! பள்ளியெழுந்தருளாயே. (௫)

இரவியர்மணிநெடுந்தேரொடுமிவரோ
இறையவர்பதினொருவிடையருமிவரோ *
மருவியமயிலினனறுமுகனிவனே
மருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டி *
புரவியோடாடலும்பாடலும் தேரும்
குமரதண்டம்புகுந்தீண்டியவெள்ளம் *
அருவரையனையநின்கோயில்முன்னிவரோ
அரங்கத்தம்மா!பள்ளியெழுந்தருளாயே. (௬)

அந்தரத்தமரர்கள்கூட்டங்களிவையோ
அருந்தவமுனிவரும்மருதருமிவரோ *
இந்திரனானையும்தானும்வந்திவனே
எம்பெருமானுனகோயிலின்வாசல்

கந்தரர்செருக்கவிச்சாதரர்நூக்க
இயக்கரும்மயங்கினர்திருவடிதொழுவான் *
அந்தரம்பாரிடமில்லைமற்றிதுவோ
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (எ)

வம்பவிழ்வானவர் வாயுறைவழங்க *
மாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா *
எம்பெருமான்படிமக்கலம்காண்டற்கு
ஏற்பனவாயினகொண்டுநன்முனிவர் *
தும்புருநாரதர்புகுந்தனரிவரோ
தோன்றினனிரவியும்துலங்கொளிபரப்பி *
அம்பரதலத்தில்நின்றகல்கின்றதிருள்போய்
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (அ)

ஸ்ரீ ஏதமில்தண்ணுமையெக்கம்மத்தளி
யாழ்குழல்முழவமோடிசைதிசைகெழுமி *
கீதங்கள்பாடினர்கின்னரர்கெருடர்கள்
கந்தருவரவர்கங்குலுளெல்லாம் *
மாதவர்வானவர்சாரணரியக்கர்
சித்தரும்மயங்கினர்திருவடிதொழுவான்
ஆதலிலவர்க்குநாளோலக்கமருள
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (௯)

ஸ்ரீ கடிமலர்க்கமலங்கள்மலர்ந்தனவிவையோ
கதிரவன்கனைகடல்முளைத்தனனிவனோ *
துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித்
துகிலுடுத்தேறினர்சூழ்புனலரங்கா! *
தொடையொத்ததுளவமும்கூடையும்பொலிந்து
தோன்றியதோள்தொண்டரடிப்பொடியென்னும்
அடியனை * அளியனென்றருளியுன்னடியார்க்
காட்படுத்தாய்பள்ளியெழுந்தருளாயே. (௧0)

கதிர், கொழு, சுடர், மேட்டு, புலம்பி, இரவி, அந்தரம், வம்பவிழ், ஏதம், கடி.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளேசரணம்.

---

சுரும்பார்குழற்கோதை
சூடிக்கொடுத்தநாச்சியார்
திருவாய்மலர்ந்தருளிய
உபநிஷத்ஸாரமாகும்

# திருப்பாவை.

தனியன்.
(பட்டரருளிச்செய்தது.)

నీళాతుఙ్గస్తనగిరితటీ సుప్తముద్బోధ్యకృష్ణమ్
పారార్థ్యంస్వంశ్రుతిశతశిర స్సిద్ధమధ్యాపయంతీ।
స్వోచ్ఛిష్టాయాంస్రజినిగళితం యాబలాత్కృత్యభుక్తే-
గోదాతస్యైనమఇదమిదం భూయఏవాస్తుభూయః॥

நீளாதுங்கஸ்தநகிரிதடீ ஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்யம்ஸ்வம்ஶ்ருதி ஶதஶிரஸ்ஸித்த மத்யாபயந்தீ-
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜிநிகளிதம் யாபலாத்க்ருத்யபுங்க்தே
கோதாதஸ்யைநமஇதமிதம் பூய ஏவாஸ்துபூய:.

இருவிகற்பநேரிசைவெண்பா.
(உய்யக்கொண்டா ரருளிச்செய்தது.)

அன்னவயற்புதுவையாண்டாளரங்கற்குப் *
பன்னுதிருப்பாவைப்பற்பதிகம் *—இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள்நற்பாமாலை * பூமாலை
சூடிக்கொடுத்தாளைச்சொல்.

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே * தொல்பாவை
பாடியருளவல்ல பல்வளையாய் * நாடிநீ
"வேங்கடவற்கென்னை விதி" யென்றவிம்மாற்றம் *
நாங்கடவா வண்ணமே நல்கு.

---

இயற்றரவிணைக் கொச்சகக்கலிப்பா.

மார்கழித்திங்கள் மதிநிறைந்தநன்னாளால் *
நீராடப்போதுவீர் போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்குமாய்ப்பாடிச் செல்வச்சிறுமியர்காள்!
கூர்வேற்கொடுந்தொழிலன் நந்தகோபன்குமரன் *

ஏரார்ந்தகண்ணி யசோதையிளஞ்சிங்கம் *
கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல்முகத்தான் *
நாராயணனே நமக்கேபறைதருவான் *
பாரோர்புகழப் படிந்தேலோரெம்பாவாய் (க)

வையத்துவாழ்வீர்காள்! நாமும்நம்பாவைக்குச் *
செய்யும்கிரிசைகள் கேளீரோ * பாற்கடலுள்
பையத்துயின்ற பரமனடிபாடி *
நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி *
மையிட்டெழுதோம் மலரிட்டுநாமுடியோம் *
செய்யாதனசெய்யோம் தீக்குறளைச்சென்றோதோம் *
ஐயமும்பிச்சையு மாந்தனையும்கைகாட்டி *
உய்யுமாறெண்ணி யுகந்தேலோரெம்பாவாய். (உ)

ஸ்ரீ ஓங்கியுலகளந்த வுத்தமன்பேர்பாடி *
நாங்கள்நம்பாவைக்குச் சாற்றிநீராடினால் *
தீங்கின்றிநாடெல்லாம் திங்கள்மும்மாரிபெய்து *
ஓங்குபெருஞ்செந்நெ லூடுகயலுகளப் *
பூங்குவளைப்போதில் பொறிவண்டுகண்படுப்பத் *
தேங்காதேபுக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்கக் * குடநிறைக்கும் வள்ளற்பெரும்பசுக்கள் *
நீங்காதசெல்வம் நிறைந்தேலோரெம்பாவாய். (ங)

ஆழிமழைக்கண்ணா! வொன்றுநீகைகரவேல் *
ஆழியுட்புக்கு முகந்துகொடார்த்தேறி *
ஊழிமுதல்வ னுருவம்போல்மெய்கறுத்துப் *
பாழியந்தோளுடைப் பற்பநாபன்கையில் *
ஆழிபோல்மின்னி வலம்புரிபோல்நின்றதிர்ந்து *
தாழாதேசார்ங்கமுதைத்தசரமழைபோல் *
வாழவுலகினில் பெய்திடாய் * நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய். (ச)

மாயனைமன்னு வடமதுரைமைந்தனைத் *
தூயபெருநீர் யமுனைத்துறைவனை *
ஆயர்குலத்தினில் தோன்றும்மணிவிளக்கைத் *
தாயைக்குடல்விளக்கஞ்செய்த தாமோதரனைத் *
தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித்தொழுது *
வாயினால்பாடி மனத்தினால்சிந்திக்கப் *

போயபிழையும் புகுதருவானின்றனவும் *
தீயினில்தூசாகும் செப்பேலோரெம்பாவாய் (ரு)

புள்ளுஞ்சிலம்பினகாண் புள்ளரையன்கோயிலில் *
வெள்ளைவிளிசங்கின் பேரரவம்கேட்டிலையோ *
பிள்ளாயெழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு *
கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி *
வெள்ளத்தரவில் துயிமலர்ந்தவித்தினை *
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும்யோகிகளும் *
மெள்ளவெழுந் தரியென்றபேரரவம் *
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். (சு)

கீசுகீசென்றெங்கு மானைச்சாத்தம் * கலந்து
பேசினபேச்சரவம் கேட்டிலையோபேய்ப்பெண்ணே *
காசும்பிறப்பும் கலகலப்பக்கைபெயர்த்து *
வாசநறுங்குழ லாய்ச்சியர் * மத்தினல்
ஓசைப்படுத்த தயிரரவம்கேட்டிலையோ *
நாயகப்பெண்பிள்ளாய்! நாராயணன்மூர்த்தி *
கேசவனைப்பாடவும் நீ கேட்டேகிடத்தியோ *
தேசமுடையாய் திறவேலோரெம்பாவாய். (எ)

கீழ்வானம்வெள்ளென் றெருமைசிறுவீடு *
மேய்வான்பரந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும் *
போவான்போகின்றாரைப் போகாமற்காத்துன்னைக் *
கூவுவான்வந்துநின்றோம் * கோதுகலமுடைய
பாவாயெழுந்திராய்! பாடிப்பறைகொண்டு *
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய *
தேவாதிதேவனைச் சென்றுநாம்சேவித்தால் *
ஆவாவென்றாராய்ந் தருளேலோரெம்பாவாய். (அ)

தூமணிமாடத்துச் சுற்றும்விளக்கெரிய *
தூபம்கமழத் துயிலணைமேல்கண்வளரும் *
மாமான்மகளே! மணிக்கதவம்தாள்திறவாய் *
மாமீரவளையெழுப்பீரோ * உன்மகள்தான்
ஊமையோ? அன்றிச்செவிடோ? அனந்தலோ? *
ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ?
மாமாயன்மாதவன் வைகுந்தனென்றென்று *
நாமம்பலவும் நவின்றேலோரெம்பாவாய். (கூ)

நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றவம்மனாய் *
மாற்றமும்தாராரோ வாசல்திறவாதார்?
நாற்றத்துழாய்முடி நாராயணன் * நம்மால்
போற்றப்பறைதரும் புண்ணியனால் * பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்த கும்பகருணனும் *
தோற்றுமுனக்கே பெருந்துயில்தான்தந்தானோ *
ஆற்றவனந்தலுடையா யருங்கலமே *
தேற்றமாய்வந்து திறவேலோரெம்பாவாய். (க0)

கற்றுக்கறவைக் கணங்கள்பலகறந்து *
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும் *
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே!
புற்றரவல்குல் புனமயிலே! போதராய் *
சுற்றத்துத்தோழிமா ரெல்லாரும்வந்து * நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன்பேர்பாடச் *
சிற்றாதேபேசாதே செல்வப்பெண்டாட்டி! நீ
எற்றுக்குறங்கும் பொருளேலோரெம்பாவாய் ?. (கக)

கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி *
நினைத்துமுலைவழியே நின்றுபால்சோர *
நனைத்தில்லம்சேறாக்கும் நற்செல்வன்தங்காய்!
பனித்தலைவீழ நின்வாசல்கடைபற்றி *
சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச்செற்ற *
மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய் *
இனித்தானெழுந்திரா யீதென்னபேருறக்கம்?
அனைத்தில்லத்தாரு மறிந்தேலோரெம்பாவாய். (கஉ)

புள்ளின்வாய்கீண்டானைப் பொல்லாவரக்கனைக் *
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய்ப் *
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார் *
வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று *
புள்ளும்சிலம்பினகாண் போதரிக்கண்ணினாய்!
குள்ளக்குளிரக் குடைந்துநீராடாதே *
பள்ளிக்கிடத்தியோ? பாவாய்! நீநன்னாளால் *
கள்ளந்தவிர்ந்து கலந்தேலோரெம்பாவாய். (கங)

உங்கள்புழைக்கடைத் தோட்டத்துவாவியுள் *
செங்கழுநீர்வாய்நெகிழ்ந் தாம்பல்வாய்கூம்பினகாண் *

செங்கல்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர் *
தங்கள்திருக்கோயில் சங்கிடுவான்போதந்தார் *
எங்களைமுன்னமெழுப்புவான்வாய்பேசும் *
நங்காயெழுந்திராய்! நாணாதாய்! நாவுடையாய்! *
சங்கொடுசக்கர மேந்துந்தடக்கையன் *
பங்கயக்கண்ணானைப் பாடேலோரெம்பாவாய். (கச)

எல்லேயிளங்கிளியே! யின்னமுறங்குதியோ ?
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்! போதருகின்றேன் *
வல்லையுன்கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும்
வல்லீர்கள்நீங்களே நானேதானாயிடுக *
ஒல்லைநீபோதா யுனக்கென்னவேறுடைமை *
எல்லாரும்போந்தாரோ போந்தார்போந்தெண்ணிக்கொள் *
வல்லானைகொன்றானை மாற்றாரைமாற்றழிக்க
வல்லானை * மாயனைப் பாடேலோரெம்பாவாய். (கரு)

ஸ்ரீ நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே ! கொடித்தோன்றுந்தோரண
வாசல்காப்பானே ! மணிக்கதவம் தாள்திறவாய் *
ஆயர்சிறுமியரோமுக் கறைபறை *
மாயன்மணிவண்ணன்நென்னலே வாய்நேர்ந்தான் *
தூயோமாய்வந்தோம் துயிலெழப்பாடுவான் *
வாயால்முன்னமுன்னம் மாற்றாதேயம்மா ! நீ
நேசநிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய். (கசு)

அம்பரமேதண்ணீரே சோறேயறஞ்செய்யும் *
எம்பெருமான்நந்த கோபாலாஎழுந்திராய் *
கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே ! குலவிளக்கே !
எம்பெருமாட்டி ! யசோதா ! யறிவுறாய் *
அம்பரமூடறுத் தோங்கியுலகளந்த *
உம்பர்கோமானே! யுறங்காதெழுந்திராய் *
செம்பொற்கழலடிச் செல்வா! பலதேவா !
உம்பியும்நீயு முறங்கேலோரெம்பாவாய். (கஎ)

ஸ்ரீ உந்துமதகளிற்ற னோடாததோள்வலியன் *
நந்தகோபாலன் மருமகளே! நப்பின்னாய் !
கந்தங்கமழும் குழலீ! கடைதிறவாய் *
வந்தெங்கும் கோழியழைத்தனகாண் * மாதவிப்

பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள் கூவினகாண் *
பந்தார்விரலி! யுன் மைத்துனன்பேர்பாடச் *
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப *
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய். (கஅ)

குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால்கட்டில்மேல் *
மெத்தென்ற பஞ்சசயநத்தின்மேலேறிக் *
கொத்தலர்பூங்குழல் நப்பின்னைகொங்கைமேல் *
வைத்துக்கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய் *
மைத்தடங்கண்ணினாய்! நீயுன்மணாளனை *
எத்தனைபோதுந் துயிலெழவொட்டாய்காண் *
எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால் *
தத்துவமன்று தகவேலோரெம்பாவாய். (கசு)

முப்பத்துமூவ ரமரர்க்குமுன்சென்று *
கப்பந்தவிர்க்கும் கலியே! துயிலெழாய் *
செப்பமுடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு
வெப்பங்கொடுக்கும் விமலா! துயிலெழாய் *
செப்பன்னமென்முலைச் செவ்வாய்ச்சிறுமருங்குல் *
நப்பின்னைநங்காய்! திருவே! துயிலெழாய் *
உக்கமுந்தட்டொளியும் தந்துன்மணாளனை *
இப்போதேயெம்மை நீராட்டேலோரெம்பாவாய். (உ0)

ஏற்றகலங்க ளெதிர்பொங்கிமீதளிப்ப
மாற்றாதேபால்சொரியும் வள்ளற்பெரும்பசுக்கள் *
ஆற்றப்படைத்தான் மகனே! யறிவுறாய் *
ஊற்றமுடையாய் ! பெரியாய் ! உலகினில்
தோற்றமாய்நின்ற சுடரே! துயிலெழாய் *
மாற்றாருனக்கு வலிதொலைந்துன்வாசற்கண் *
ஆற்றாதுவந்துன் னடிபணியுமாபோலே *
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோரெம்பாவாய். (உக)

அங்கண்மாஞாலத் தரசரபிமாந *
பங்கமாய்வந்து நின்பள்ளிக்கட்டிற்கீழே *
சங்கமிருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம் *
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே *
செங்கண்சிறிச்சிறிதே யெம்மேல்விழியாவோ *
திங்களுமாதித்தியனு மெழுந்தாற்போல் *

அங்கணிரண்டுங்கொண் டெங்கள்மேல்நோக்குதியேல்
எங்கண்மேற்சாப மிழுந்தேலோரெம்பாவாய். (உஉ)

மாரிமலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் *
சீரியசிங்க மறிவுற்றுத்தீவிழித்து *
வேரிமயிர்பொங்க வெப்பாடும்பேர்ந்துதறி *
மூரிநிமிர்ந்து முழங்கிப்புறப்பட்டுப் *
போதருமாபோலே நீபூவைப்பூவண்ணா ! உன்
கோயில்நின்றிங்ஙனே போந்தருளிக் * கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்து * யாம்வந்த
காரியமாராய்ந்தருளேலோரெம்பாவாய். (உ௩)

அன்றிவ்வுலகமளந்தா யடிபோற்றி !
சென்றங்குத்தென்னிலங்கை செற்றாய்திறல்போற்றி !
பொன்றச்சகடமுதைத்தாய் புகழ்போற்றி !
கன்றுகுணிலாவெறிந்தாய் கழல்போற்றி !
குன்றுகுடையாவெடுத்தாய் குணம்போற்றி !
வென்றுபகைகெடுக்கும் நின்கையில்வேல்போற்றி !
என்றென்றுன்சேவகமே யேத்திப்பறைகொள்வான் *
இன்றுயாம்வந்தோ மிரங்கேலோரெம்பாவாய். (உ௪)

ஒருத்திமகனாய்ப் பிறந்து * ஓரிரவில்
ஒருத்திமகனா யொளித்துவளரத் *
தரிக்கிலானாகித் தான்தீங்குநினைந்த *
கருத்தைப்பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில் *
நெருப்பென்ன நின்றநெடுமாலே ! உன்னை
அருத்தித்துவந்தோம் பறைதருதியாகில் *
திருத்தக்கசெல்வமும் சேவகமும்யாம்பாடி *
வருத்தமுந்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய். (உ௫)

மாலே! மணிவண்ணா! மார்கழிநீராடுவான் *
மேலையார்செய்வனகள் வேண்டுவனகேட்டியேல்
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன *
பாலன்னவண்ணத்துன் பாஞ்சசன்னியமே *
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே *
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே *

கோலவிளக்கேகொடியேவிதானமே *
ஆலினிலையா யருளேலோரெம்பாவாய். (உகூ)

ஸ்ரீ கூடாரைவெல்லும்சீர்க் கோவிந்தா ! உன்றன்னைப்
பாடிப்பறைகொண்டு யாம்பெறுசம்மானம் *
நாடுபுகழும் பரிசினால்நன்றாகச் *
சூடகமேதோள்வளையே தோடேசெவிப்பூவே *
பாடகமேயென்றனைய பல்கலனும்யாமணிவோம் *
ஆடையுடுப்போ மதன்பின்னேபாற்சோறு
மூட * நெய்பெய்து முழங்கைவழிவாரக் *
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். (உஎ)

ஸ்ரீ கறவைகள்பின்சென்று கானஞ்சேர்ந்துண்போம் *
அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்துன்றன்னைப்
பிறவிபெறுந்தனை புண்ணியம் யாமுடையோம் *
குறைவொன்றுமில்லாத கோவிந்தா ! உன்றன்னோ
டுறவேல்நமக் கிங்கொழிக்கவொழியாது *
அறியாதபிள்ளைகளோ மன்பினால் * உன்றன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே *
இறைவா! நீதாராய் பறையேலோரெம்பாவாய். (உஅ)

(சாற்றுப்பாட்டுக்கள்.)

ஸ்ரீ சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச்சேவித்துன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய் *
பெற்றமேய்த்துண்ணும் குலத்தில்பிறந்து * நீ
குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகாது *
இற்றைப்பறைகொள்வா னன்றுகாண்கோவிந்தா !
எற்றைக்குமேழேழ்பிறவிக்கும் * உன்றன்னோ
டுற்றோமேயாவோ முனக்கேநாமாட்செய்வோம் *
மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய். (உகூ)

ஸ்ரீ வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனைத் *
திங்கள்திருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி *
அங்கப்பறைகொண்டவாற்றை * அணிபுதுவைப்
பைங்கமலத்தண்தெரியல் பட்டர்பிரான்கோதைசொன்ன *

சங்கத்தமிழ்மாலை முப்பதும்தப்பாமே *
இங்கிப்பரிசுரைப்பா ரீரிரண்டுமால்வரைத்தோள் *
செங்கட்டிருமுகத்துச் செல்வத்திருமாலால் *
எங்குந்திருவருள்பெற் றின்புறுவரெம்பாவாய். (௩0)

அடிவரவு—மார்கழி, வையத்து, ஓங்கி, ஆழி, மாயன், புள், கீசு, கீழ் வானம், தூமணி, நோற்று, கற்று, கனைத்து, புள், உங்கள், எல்லே, நாயகன், அம்பரம், உந்து, குத்து, முப்பத்து, ஏற்ற, அங்கண், மாரி, அன்றி, ஒருத்தி மாலே, கூடாரை, கறவை, சிற்றம், வங்கம்.

ஆண்டாள்திருவடிகளேசரணம்.

———(*)———

திருமஞ்சனகாலத்திலநுஸந்திக்குமது.

பெரியாழ்வார் அருளிச்செய்த

## நீராட்டம்.

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

ஸ்ரீ: வெண்ணெயளைந்தகுணுங்கும்விளையாடுபுழுதியுங்கொண்டு *
திண்ணெனவிவ்விராவுன்னைத் தேய்த்துக்கிடக்கநானொட்டேன் *
எண்ணெய்ப்புளிப்பழங்கொண்டிங்கெத்தனைபோதுமிருந்தேன் *
நண்ணலரியபிரானே! நாரணா! நீராடவாராய். (௧)

கன்றுகளோடச்செவியில் கட்டெறும்புபிடித்திட்டால் *
தென்றிக்கெடுமாகில் வெண்ணெய்திரட்டிவிழுங்குமாகாண்பன் *
நின்றமராமரம்சாய்த்தாய்! நீபிறந்ததிருவோணம்
இன்று * நீநீராடவேண்டு மெம்பிரானோடாதேவாராய்! (௨)

பேய்ச்சிமுலையுண்ணக்கண்டுபின்னையுமில்லாதென்னெஞ்சம் *
ஆய்ச்சியரெல்லாருங்கூடி யழைக்கவு நான்முலைதந்தேன் *
காய்ச்சினநீரொடுநெல்லிக் கடாரத்தில்பூரித்துவைத்தேன் *
வாய்த்தபுகழ்மணிவண்ணா ! மஞ்சனமாட நீவாராய். (௩)

கஞ்சன்புணர்ப்பினில்வந்த கடியசகடமுதைத்து *
வஞ்சகப்பேய்மகள்துஞ்ச வாய்முலைவைத்தபிரானே !
மஞ்சளும்செங்கழுநீரின் வாசிகையும்நாறுசாந்தும் *
அஞ்சனமும்கொண்டுவைத்தே னழகனே ! நீராடவாராய். (௪)

அப்பங்கலந்தசிற்றுண்டி அக்காரம்பாலில்கலந்து *
சொப்படநான்சுட்டுவைத்தேன் தின்னலுறுதியேல்நம்பீ !

செப்பிளமென்முலையார்கள் சிறுபுறம்பேசிச்சிரிப்பர் *
சொப்படநீராடவேண்டும் சோத்தம்பிரானிங்கேவாராய் ! (ரு)

எண்ணெய்க்குடத்தையுருட்டி யிளம்பிள்ளைகிள்ளியெழுப்பிக் *
கண்ணைப்புரட்டிவிழித்துக் கழகண்டுசெய்யும்பிரானே !
உண்ணக்கனிகள்தருவ னொலிகடலோதநீர்போலே *
வண்ணமழகியநம்பி! மஞ்சனமாடநீவாராய். (சு)

கறந்தநற்பாலும்தயிரும் கடைந்துறிமேல்வைத்தவெண்ணெய் *
பிறந்ததுவேமுதலாகப் பெற்றறியேனெம்பிரானே !
சிறந்தநற்றாயலர்தூற்று மென்பதனால்பிறர்முன்னே *
மறந்துமுரையாடமாட்டேன் மஞ்சனமாடநீவாராய். (எ)

கன்றினைவாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து * போதும்]
பின்தொடர்ந்தோடியோர் பாம்பைப்பிடித்துக்கொண்டாட்டினாய்
நின்திறத்தேனல்லேன்நம்பி! நீபிறந்ததிருநன்னாள் *
நன்றுநீநீராடவேண்டும் நாரணா ! வோடாதேவாராய். (அ)

பூணித்தொழுவினில்புக்குப் புழுதியளைந்தபொன்மேனி *
காணப்பெரிதுமுகப்பன் ஆகிலும்கண்டார்பழிப்பர் *
நாணித்தனையுமிலாதாய்! நப்பின்னைகாணில்சிரிக்கும் *
மாணிக்கமே! என்மணியே! மஞ்சனமாடநீவாராய். (கூ)

ஃஃ கார்மலிமேனிநிறத்துக் கண்ணபிரானையுகந்து *
வார்மலிகொங்கையசோதை மஞ்சனமாட்டியவாற்றைப் *
பார்மலிதொல்புதுவைக்கோன் பட்டர்பிரான்சொன்னபாடல் *
சீர்மலிசெந்தமிழ்வல்லார் தீவினையாதுமிலரே! (க0)

அடிவரவு—வெண்ணெய், கன்று, பேய்ச்சி, கஞ்சன், அப்பம், எண்ணெய், கறந்த, கன்றினை, பூணி, கார்.

பெரியாழ்வார்திருவடிகளேசரணம்.

———:0:———

(திருமஞ்சனகாலத்தில் சேர்த்து அநுஸந்திக்கும்பாட்டுகள்.)

(திருக்குறுந்தாண்டகம்.)

முன்பொலாவிராவணன்றன்முதுமதிளிலங்கைவேவித் *
தன்பினோடுமன்வர் தாங்கடியிணைபணிய நின்றாற்கு *
என்பெலாமுருகியுக்கிட் டென்னுடைநெஞ்சமென்னும் *
அன்பினால்ஞானநீர்கொண் டாட்டுவன்டியனேனே. (கரு)

மாயமான்மாயச்செற்று மருதிறநடந்து * வையம் *
தாயமாபரவைபொங்கத்தடவரைதிரித்து * வானோர்க்
கீயுமாலெம்பிரானார்க் கென்னுடைச்சொற்களென்னும் *
தூயமாமாலைகொண்டு சூட்டுவன்தொண்டனேனே. (கசு)

திருவிருத்தம்.

சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி * விண்ணோர்கள்நன்னீர்
ஆட்டியந்தூபந்தராநிற்கவேயங்கு * ஓர்மாயையினால்
ஈட்டியவெண்ணெய்தொடுவுண்ணப்போந் திமிலேற்றுவன்கூன்
கோட்டிடையாடினைகூத்து * அடலாயர்தம்கொம்பினுக்கே. (உக)

(பெரியாழ்வார்திருமொழி - ங - ம் பத்து, ங - ம் திருமொழி.

காடுகளூடுபோய்க்கன்றுகள்மேய்த்துமறியோடி * கார்க்கோடல்பூச்
சூடிவருகின்றதாமோதரா! கற்றுத்தூளிகாணுன்னுடம்பு *
பேடைமயிற்சாயல்பின்னைமணாளா! நீராட்டமைத்துவைத்தேன்
ஆடியமுதுசெயப்பனுமுண்டிலனுன்னோடுடனேயுண்பான். (௧.உ)

இன்னார்வெண்சங்குடையாய் ! திருநாள்திருவோணமின்றேழுநாள்முன்
பண்ணேர்மொழியாரைக்கூவிமுளையட்டிப்பல்லாண்டுகூறுவித்தேன் *
கண்ணாலஞ்செய்யக்கறியும் கலத்ததரிசியுமாக்கிவைத்தேன் *
கண்ணா! நீநாளைத்தொட்டுக்கன்றின்பின்போகேல்! கோலஞ்செய்திங்கேயிரு.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

(அந்திவேளையில் திருமாலைசாத்தும்போதநுஸந்திக்குமவை.)

பூச்சூட்டல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆநிரைமேய்க்கநீபோதி யருமருந்தாவதறியாய் *
கானகமெல்லாம்திரிந் துன்கரியதிருமேனிவாட *
பானையில்பாலைப்பருகிப் பற்றுதாரெல்லாம்சிரிப்பத் *
தேனிலினியபிரானே! செண்பகப்பூச்சூட்டவாராய். (க)

கருவுடைமேகங்கள்கண்டாலுன்னைக்கண்டாலொக்குங்கண்கள் *
உருவுடையாய்! உலகேழுமுண்டாகவந்துபிறந்தாய் !
திருவுடையாள்மணவாளா! திருவரங்கத்தேகிடந்தாய் !
மருவிமணங்கமழ்கின்ற மல்லிகைப்பூச்சூட்டவாராய். (உ)

மச்சொடுமாளிகையேறி மாதர்கள்தம்மிடம்புக்குக் *
கச்சொடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி *

நிச்சலும்தீமைகள்செய்வாய் நீள்திருவேங்கடத்தெந்தாய் !
பச்சைத்தமனகத்தோடு பாதிரிப்பூச்சூட்டவாராய். (௩)

தெருவின்கண்ணின்றிளவாய்ச்சிமார்களைத்தீமைசெய்யாதே *
மருவும்தமனகமும்சீர் மாலைமணங்கமழ்கின்ற *
புருவம்கருங்குழல்நெற்றி பொலிந்தமுகிற்கன்றுபோலே *
உருவமழகியநம்பீ! யுகந்திவைசூட்டநீவாராய். (௪)

புள்ளினைவாய்பிளந்திட்டாய் பொருகரியின்கொம்பொசித்தாய் *
கள்ளவரக்கியைமூக்கொடு காவலனைத்தலைகொண்டாய் *
அள்ளிநீவெண்ணெய்விழுங்க அஞ்சாதடியேனடித்தேன் *
தெள்ளியநீரிலெழுந்த செங்கழுநீர்சூட்டவாராய். (௫)

எருதுகளோடுபொருதியேதுமுலோபாய்காண்நம்பீ !
கருதியதீமைகள்செய்து கஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய் *
தெருவின்கண்தீமைகள்செய்து சிக்கெனமல்லர்களோடு *
பொருதுவருகின்றபொன்னே! புன்னைப்பூச்சூட்டநீவாராய். (௬)

குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே !
மடங்கொள்மதிமுகத்தாரை மால்செய்யவல்லவென்மைந்தா !
இடந்திட்டிரணியன்நெஞ்சை யிருபிளவாகமுன்கீண்டாய் *
குடந்தைக்கிடந்தவெங்கோவே! குருக்கத்திப்பூச்சூட்டவாராய். (௭)

சீமாலிகனவனோடு தோழமைகொள்ளவும்வல்லாய்
சாமாறவனைநீயெண்ணிச் சக்கரத்தால்தலைகொண்டாய் *
ஆமாறறியும்பிரானே! அணியரங்கத்தேகிடந்தாய் *
ஏமாற்றமென்னைத்தவிர்த்தா யிருவாட்சிப்பூச்சூட்டவாராய். (௮)

அண்டத்தமரர்கள்சூழ அத்தாணியுள்ளங்கிருந்தாய் *
தொண்டர்கள்நெஞ்சிலுறைவாய் தூமலராள்மணவாளா !
உண்டிட்டுலகினையேழு மோராலிலையில்துயில்கொண்டாய் *
கண்டுநானுன்னையுகக்கக் கருமுகைப்பூச்சூட்டவாராய். (௯)

** "செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி *
எண்பகர்பூவும்கொணர்ந்தே னின்றிவைசூட்டவா" வென்று *
மண்பகர்கொண்டானை ஆய்ச்சிமகிழ்ந்துரைசெய்தவிம்மாலை *
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்னபத்தே. (௰)

அடிவரவு-ஆநிரை, கரு, மச்சு, தெரு, புள், எருது, குடம், சீமாலி, அண்டம், செண்பகம்.

பெரியாழ்வார்திருவடிகளேசரணம்.

(திருவழகிற்குத்தோஷம்வாராதபடி திருவந்திக்காப்பிடுதல்)

## காப்பிடல்:

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஸ்ரீ இந்திரனோடுபிரமனீச னிமையவரெல்லாம் *
மந்திரமாமலர்கொண்டு மறைந்தவராய்வந்துநின்றார் *
சந்திரன்மாளிகைசேரும் சதுரர்கள்வெள்ளறைநின்றாய் !
அந்தியம்போதிதுவாகு மழகனே! காப்பிடவாராய். (க)

கன்றுகளில்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம் *
நின்றொழிந்தேனுன்னைக்கூவி நேசமேலொன்றுமிலாதாய்
மன்றினில்லேலந்திப்போது மதிள்திருவெள்ளறைநின்றாய்
நன்றுகண்டாயென்றன்சொல்லு நானுன்னைக்காப்பிடவாராய். (உ)

செப்போதுமென்முலையார்கள் சிறுசோறுமில்லுஞ்சிதைத்திட்டு *
அப்போதுநானுரைப்பப்போ யடிசிலுமுண்டிலையாள்வாய் !
முப்போதும்வானவரேத்தும் முனிவர்கள்வெள்ளறைநின்றாய் !
இப்போதுநானொன்றுஞ்செய்யே னெம்பிரான்!காப்பிடவாராய்.(ங)

கண்ணில்மணற்கொடுதூவிக் காலினாற்பாய்ந்தனையென்றென்று *
எண்ணரும்பிள்ளைகள்வந்திட்டிவரால் முறைப்படுகின்றார் *
கண்ணனே!வெள்ளறைநின்றாய்!கண்டாரோடேதீமைகள்செய்வாய்!
வண்ணமேவேலையதொப்பாய்! வள்ளலே! காப்பிடவாராய். (ச)

பல்லாயிரவரிவ்வூரிற்பிள்ளைகள் தீமைகள்செய்வார் *
எல்லாமுன்மேலன்றிப்போகா தெம்பிரான்! நீயிங்கேவாராய் *
நல்லார்கள்வெள்ளறைநின்றாய்! ஞானச்சுடரே! யுன்மேனி *
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச் சொப்படக்காப்பிடவாராய். (ரு)

"கஞ்சன்கறுக்கொண்டுநின்மேல் கருநிறச்செம்மயிர்ப்பேயை *
வஞ்சிப்பதற்குவிடுத்தான்" என்பதோர்வார்த்தையுமுண்டு *
மஞ்சுதவழ்மணிமாட மதிள்திருவெள்ளறைநின்றாய் !
அஞ்சுவன்நீயங்குநிற்க அழகனே! காப்பிடவாராய். (சு)

கள்ளச்சகடும்மருதும் கலக்கழியவுதைசெய்த *
பிள்ளையரசே! நீபேயைப்பிடித்துமுலையுண்டபின்னை *
உள்ளவாறொன்றுமறியே னொளியுடைவெள்ளறைநின்றாய் !
பள்ளிகொள்போதிதுவாகும் பரமனே! காப்பிடவாராய். (எ)

இன்பமதனையுயர்த்தாய்! இமையவர்க்கென்றுமரியாய் !
கும்பக்களிறட்டகோவே! கொடுங்கஞ்சன்கெஞ்சினிற்கூற்றே !
செம்பொன்மதில்வெள்ளறையாய்! செல்வத்திருல்வளர்பிள்ளாய்
கம்பக்கபாலிகாணங்கு கடிதோடிக்காப்பிடவாராய். (அ)

இருக்கொடுநீர்சங்கிற்கொண்டிட் டெழில்மறையோர்வந்துநின்றார் *
தருக்கேல்நம்பி! சந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய்சிலநாள் *
திருக்காப்புநானுன்னைச்சாத்தத்தேசுடைவெள்ளறைநின்றாய் !
உருக்காட்டுமந்திவிளக்கின்றொளிகொள்ளவேற்றுகேன்வாராய். (௯)

✣ போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை *
மாதர்க்குயர்ந்தவசோதை மகன்றன்னைக்காப்பிட்டமாற்றம் *
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை *
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. (௧0)

அடிவரவு—இந்திரன், கன்று, செப்பு, கண்ணில், பல்லாய், கஞ்சன், கள்ள, இன்பம், இருக்கு, போதமர்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

---

(மண்ணோர்விண்ணோர்தொழும் திருவேங்கடத்தானிடத்தில்
சேஷத்வமாகஅறுவஸ்திக்குமது.)

கலிவிருத்தம்.

✣ சென்னியோங்கு தண்டிருவேங்கடமுடையாய் ! உலகு
தன்னைவாழநின்றநம்பீ! தாமோதரா ! சதிரா !
என்னையுமென்னுடைமையையுமுன்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு
நின்னருளேபுரிந்திருந்தே னினியென்திருக்குறிப்பே? (௧)

பறவையேறுபரம்புருடா! நீயென்னைக்கைக்கொண்டபின் *
பிறவியென்னும்கடலும்வற்றிப்பெரும்பதமாகின்றதால் *
இறவுசெய்யும்பாவக்காடு தீக்கொளீஇவேகின்றதால் *
அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றிவாய்க்கொண்டதே. (உ)

எம்மனா! வென்குலதெய்வமே! யென்னுடைநாயகனே !
நின்னுளேனாய்ப்பெற்றநன்மை யிவ்வுலகினிலார்பெறுவார்! *
நம்மன்போலேவீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ளபாவமெல்லாம் *
சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே. (௩)

கடல்கடைந்தமுதங்கொண்டு கலசத்தைநிறைத்தாற்போல் *
உடலுருகிவாய்திறந்து மடுத்துன்னைநிறைத்துக்கொண்டேன் *

கொடுமைசெய்யும் கூற்றமுமென்கோலாடிகுறுகப்பெறா *
தடவரைத்தோள்சக்கரபாணி சார்ங்கவிற்சேவகனே ! (ச)

பொன்னைக்கொண்டுரைகல்மீதேநிறமெழவுரைத்தாற்போல் *
உன்னைக்கொண்டென்நாவகம்பால்மாற்றின்றியுரைத்துக்கொண்டேன்*
உன்னைக்கொண்டென்னுள்வைத்தேனென்னையுமுன்னிலிட்டேன்*
என்னப்பா! வென்னிருடீகேசா! என்னுயிர்க்காவலனே! (ரு)

உன்னுடையவிக்கிரமமொன்றொழியாமலெல்லாம் *
என்னுடையநெஞ்சகம்பால் சுவர்வழியெழுதிக்கொண்டேன் *
மன்னடங்கமழுவலங்கைக்கொண்டவிராமநம்பீ !
என்னிடைவந்தெம்பெருமா னினியெங்குப்போகின்றதே. (சு)

பருப்பதத்துக்கயல்பொறித்த பாண்டியர்குலபதிபோல்
திருப்பொலிந்தசேவடி யென்சென்னியின்மேல்பொறித்தாய் *
"மருப்பொசித்தாய்!" "மல்லடர்த்தாய்!" என்றென்றுன்வாசகமே*
உருப்பொலிந்தநாவினேனை யுனக்குரித்தாக்கினையே. (எ)

அனந்தன்பாலும்கருடன்பாலும் ஐதுநொய்தாகவைத்து * என்
மனந்தனுள்ளேவந்துவைகி வாழச்செய்தாயெம்பிரான் !
நினைந்தென்னுள்ளேநின்றுநெக்குக் கண்களசும்பொழுக
நினைந்திருந்தேசிரமந்தீர்ந்தேன் நேமிநெடியவனே ! (அ)

பனிக்கடலில்பள்ளிகோளைப் பழகவிட்டு * ஓடிவந்தென்
மனக்கடலில்வாழவல்ல மாய! மணாள! நம்பீ !
தனிக்கடலேதனிச்சுடரே தனியுலகேயென்றென்று
உனக்கிடமாயிருக்க வென்னையுனக்குரித்தாக்கினையே ! (கூ)

✽ தடவரைவாய்மிளிர்ந்துமின்னும்தவளநெடுங்கொடிபோல்
சுடரொளியாய்நெஞ்சினுள்ளே தோன்றுமென்சோதிநம்பீ !
வடதடமும்வைகுந்தமும் மதிள்துவராவதியும் *
இடவகைகளிகழ்ந்திட் டென்பாலிடவகைகொண்டனையே. (கo)

✽ வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தன்மனத்தே *
கோயில்கொண்டகோவலனைக் கொழுங்குளிர்முகில்வண்ணனை *
ஆயரேற்றையமரர்கோவை யந்தணர்தமமுதத்தினைச் *
சாயைபோலப்பாடவல்லார் தாமுமணுக்கர்களே. (கக)

அடிவரவு—சென்னி, பறவை, எம்மனா, கடல், பொன், உன், பருப்ப, அனந்தன், பனி, தடவரை, வேயர்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

திருப்பாணாழ்வார் அருளிய

(வேதசாரமாகிய)

# அமலனாதிப்பிரான்.

## தனியன்கள்.

(பெரியநம்பிகளருளிச்செய்தது.)

ఆపాదచూడమనుభూయ హరింశయానం । మధ్యేకవేరదుహితు ర్ముదితాంతరాత్మా ।
అదృష్టతాంనయనయో ర్విషయాంతరాణాం। యోనిశ్చికాయమనసై మునివాహనంతం॥

ஆபாதசூடமநுபூய ஹரிம்ஶயாநம்
மத்யேகவேரதுஹிதுர் முதிதாந்தராத்மா
அத்ருஷ்டதாம்நயநயோர் விஷயாந்தராணாம்
யோநிஶ்சிகாயமநஸை முநிவாஹநந்தம்.

(திருமலைநம்பிகளருளிச்செய்தது.)

கலிநிலைத்துறை.

காட்டவேகண்டபாதம் கமலநல்லாடையுந்தி *
தேட்டருமுதரபந்தம் திருமார்வுகண்டம்செவ்வாய் *
வாட்டமில்கண்கள்மேனி முநியேறித்தனிபுகுந்து *
பாட்டினால்கண்டுவாழும் பாணர்தாள்பரவினோமே.

(வெண்டுறை.)

அமலனாதிப்பிரானடியார்க்கென்னையாட்படுத்த
விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன்
நிமலன்நின்மலன்நீதிவானவன்நீள்மதிளரங்கத்தம்மான் * திருக்
கமலபாதம்வந் தென்கண்ணினுள்ளனவொக்கின்றதே. (௧)

உவந்தஉள்ளத்தனா யுலகமளந்தண்டமுற *
நிவர்ந்தநீண்முடிய னன்றுநேர்ந்தநிசாசரரைக் *
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன் கடியார்பொழிலரங்கத்தம்மான் * அரைச்
சிவந்தவாடையின்மேல் சென்றதாமென்சிந்தனையே! (௨)

மந்திபாய்வடவேங்கடமாமலை * வானவர்கள்
சந்திசெய்யநின்றானரங்கத்தரவினணையான் *
அந்திபோல்நிறத்தாடையு மதன்மேலயனைப்படைத்ததோரெழில் *
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே? (௩)

சதுரமாமதிள்சூழிலங்கைக்கிறைவன் தலைபத்
துதிரவோட்டி * ஓர்வெங்கணையுய்த்தவனோதவண்ணன் *
மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான் * திருவயிற்
றுதரபந்தன மென்னுள்ளத்துள்நின்றுலாகின்றதே ! (ச)

பாரமாயபழவினைபற்றறுத்து * என்னைத்தன்
வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றியென்னுள்புகுந்தான் *
கோரமாதவம்செய்தனன்கொலறியே னரங்கத்தம்மான் * திரு
வாரமார்பதன்றோ அடியேனையாட்கொண்டதே ? (ரு)

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் * அஞ்சிறைய
வண்டுவாழ்பொழில்சூழரங்கநகர்மேயவப்பன் *
அண்டரண்டபகிரண்டத் தொருமாநிலமெழுமால்வரை * முற்றும்
உண்டகண்டங்கண்டீ ரடியேனையுய்யக்கொண்டதே ! (சு)

கையினார்சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் * துளபவிரையார்கமழ்நீண்முடியெம்
ஐயனார் * அணியரங்கனா ரரவினணைமிசைமேயமாயனார் *
செய்யவாயையோ என்னைச்சிந்தைகவர்ந்ததுவே ! (எ)

பரியனாகிவந்தவவுணனுடல்கீண்ட * அமரர்க்
கரியவாதிப்பிரா னரங்கத்தமலன்முகத்துக் *
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி * நீண்டவப்
பெரியவாயகண்க ளென்னைப்பேதைமைசெய்தனவே ! (அ)

ஆலமாமரத்தினிலைமே லொருபாலகனாய் *
ஞாலமேழுமுண்டா னரங்கத்தரவினணையான் *
கோலமாமணியாரமும்முத்துத்தாமமும் முடிவில்லதோரெழில் *
நீலமேனியையோ நிறைகொண்டதென்நெஞ்சினையே ! (கூ)

கொண்டல்வண்ணனைக் கோவலனாய்வெண்ணெய்
உண்டவாயன் * என்னுள்ளங்கவர்ந்தானை *
அண்டர்கோனணியரங்கன் * என்னமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே ! (க0)

அடிவரவு.—அமலன், உவந்த, மந்தி, சதுரம், பாரம், துண்ட, கை, பரி, ஆலம், கொண்டல்.

திருப்பாணாழ்வார் திருவடிகளேசரணம்.

——(*)——



நாய்ச்சியார்திருவாய்மலர்ந்தருளிய

# வாரணமாயிரம்.

## தனியன்.

அல்லிநாட்டாமரைமேலாரணங்கினின்றுணைவி
மல்லிநாடாண்டமடமயில் — மெல்லியலாள்
ஆயர்குலவேந்தனாகத்தாள் தென்புதுவை
வேயர்பயந்தவிளக்கு.

(கலிவிருத்தம்)

ஸ்ரீ வாரணமாயிரம்சூழவலம்செய்து *
நாரணநம்பிநடக்கின்றானென்றெதிர் *
பூரணபொற்குடம்வைத்துப் புறமெங்கும் *
தோரணம்நாட்டக்கனாக்கண்டேன்தோழீநான். (௧)

நாளைவதுவைமணமென்றுநாளிட்டு *
பாளைகமுகுபரிசுடைப்பந்தற்கீழ் *
கோளரிமாதவன்கோவிந்தனென்பானோர் *
காளைபுகுதக்கனாக்கண்டேன்தோழீநான். (௨)

இந்திரனுள்ளிட்டதேவர்குழாமெல்லாம் *
வந்திருந்தென்னைமகட்பேசிமந்திரித்து
மந்திரக்கோடியுடுத்தி * மணமாலை
அந்தரிசூட்டக்கனாக்கண்டேன்தோழீநான். (௩)

நால்திசைத்தீர்த்தங்கொணர்ந்துநனிநல்கி
பார்ப்பனச்சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தி
பூப்புனைகண்ணிப்புனிதனோடென்றன்னை *
காப்புநாண்கட்டக்கனாக்கண்டேன்தோழீநான். (௪)

கதிரொளிதீபம்கலசமுடனேந்தி *
சதிரிளமங்கையர்தாம் வந்தெதிர்கொள்ள *

மதுரையார்மன்னனடிநிலைதொட்டு * எங்கும்
அதிரப்புகுதக்கனாக்கண்டேன்தோழீநான். (௫)

மத்தளம்கொட்ட வரிசங்கம்நின்றூத *
முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தற்கீழ் *
மைத்துனன்நம்பி மதுசூதன்வந்து * என்னைக்
கைத்தலம்பற்றக் கனாக்கண்டேன்தோழீநான். (௬)

வாய்நல்லார்நல்ல மறையோதிமந்திரத்தால் *
பாசிலைநாணல்படுத்துப் பரிதிவைத்து *
காய்சினமாகளிறன்னா னென்கைப்பற்றி *
தீவலம்செய்யக் கனாக்கண்டேன்தோழீநான். (௭)

இம்மைக்குமேழேழ் பிறவிக்கும்பற்றாவான் *
நம்மையுடையவன் நாராயணன்நம்பி *
செம்மையுடையதிருக்கையால் தாள்பற்றி *
அம்மிமிதிக்கக் கனாக்கண்டேன்தோழீநான். (௮)

வரிசிலைவாள்முகத் தென்னைமார்தாம்வந்திட்டு *
எரிமுகம்பாரித் தென்னைமுன்னேநிறுத்தி *
அரிமுகனச்சுதன்கைம்மேலென்கைவைத்து *
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (௯)

குங்குமமப்பிக்குளிர்சாந்தம்மட்டித்து *
மங்கலவீதிவலம்செய்துமணநீர் *
அங்கவனோடுமுடன்சென்றங் கானைமேல்
மஞ்சனமாட்டக்கனாகண்டேன் தோழீநான். (௧௦)

ஆயனுக்காகத் தான்கண்டகனாவினை *
வேயர்புகழ்வில்லிபுத்தூர்க்கோன்கோதைசொல் *
தூயதமிழ்மாலையீரைந்தும்வல்லவர் *
வாயுநன்மக்களைப்பெற்றுமகிழ்வரே. (௧௧)

வாரணம், நாளை, இந்திரன், நாற்றிசை, கதிர், மத்தளம், வாய்நல்லார், இம்மை, வரிசிலை, குங்குமம், ஆயன், கருப்பூரம்.

ஆண்டாள்திருவடிகளேசரணம்.



(நாதனுக்கு நாலாயிரமுறைக்கைக்கு மூலமந்திரமானது.)

மதுரகவியாழ்வாரருளிச்செய்த

# கண்ணிநுண்சிறுத்தாம்பு.

ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்தன.

## தனியன்கள்.

అవిదితవిషయాన్తరశ్శఠారే రుపనిషదాముపగానమాత్రభోగః॥
అపిచగుణవశాత్తదేకశేషీ మధురకవిర్హృదయేమమావిరస్తు॥

அவிதிதவிஷயாந்தரஶ்ஶடாரோ ருபநிஷதாமுபகாநமாத்ரபோக:-
அபிசகுணவஶாத்ததேகஶேஷீ மதுரகவிர்ஹ்ருதயேமமாவிரஸ்து !

(நேரிசைவெண்பா.)

"வேறொன்றும்நானறியேன் ; வேதம்தமிழ்செய்த *
மாறன்சடகோபன் வண்குருகூர்—ஏறெங்கள் *
வாழ்வாமென்" றேத்து மதுரகவியார் * எம்மை
ஆள்வாரவரேயரண் !

(கலிவிருத்தம்.)

கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணியபெருமாயன் * என்னப்பனில் *
நண்ணித்தென்குருகூர் நம்பியென்றக்கால் *
அண்ணிக்குமமுதூறு மென்நாவுக்கே ! (க)

நாவினால்நவிற் றின்பமெய்தினேன் *
மேவினே னவன்பொன்னடிமெய்ம்மையே *
தேவுமற்றறியேன் குருகூர்நம்பி *
பாவினின்னிசை பாடித்திரிவனே ! (உ)

திரிதந்தாகிலும் தேவபிரானுடைக் *
கரியகோலத் திருவுருக்காண்பன்நான் *
பெரியவண்குருகூர் நகர்நம்பிக்கா
ளுரியனாய் * அடியேன்பெற்றநன்மையே ! (௩)

நன்மையால்மிக்க நான்மறையாளர்கள் *
புன்மையாகக் கருதுவராதலில் *
அன்னையாயத்தனா யென்னையாண்டிடும்
தன்மையான் * சடகோபனென்நம்பியே ! (௪)

நம்பினேன் பிறர்நன்பொருள் தன்னையும் *
நம்பினேன் மடவாரையுமுன்னெலாம் *
செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்
கன்பனாய் * அடியேன் சதிர்த்தேனின்றே ! (௫)

இன்றுதொட்டுமெழுமையுமெம்பிரான் *
நின்றுதன்புக ழேத்தவருளினான் *
குன்றமாடத் திருக்குருகூர்நம்பி *
என்றுமென்னை யிகழ்விலன் காண்மினே ! (௬)

கண்டுகொண்டென்னைக் காரிமாறப்பிரான் *
பண்டைவல்வினை பாற்றியருளினான் *
எண்டிசையு மறியவியம்புகேன் *
ஒண்டமிழ்ச்சடகோபனருளையே ! (௭)

அருள்கொண்டாடு மடியவரின்புற *
அருளினா னவ்வருமறையின்பொருள் *
அருள்கொண் டாயிரமின்தமிழ்பாடினான் *
அருள்கண்டீ ரிவ்வுலகினில்மிக்கதே ! (௮)

மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள் *
நிற்கப்பாடி யென்நெஞ்சுள்நிறுத்தினான் *
தக்கசீர்ச் சடகோபனென்நம்பிக்கு * ஆள்
புக்ககாத லடிமைப்பயனன்றே ! (௯)

பயனன்றாகிலும் பாங்கலராகிலும் *
செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான் *
குயில்நின்றார்பொழில்சூழ் குருகூர்நம்பி !
முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே ! (௧௦)

அன்பன்றன்னை யடைந்தவர்கட்கெலாம்
அன்பன் * தென்குருகூர் நகர்நம்பிக்கு *
அன்பனாய் மதுரகவிசொன்னசொல்
நம்புவார்பதி * வைகுந்தங்காண்மினே ! (௧௧)

மதுரகவியாழ்வார் திருவடிகளேசரணம்.

நம்மாழ்வார் அருளிச்செய்த

# கோயில் திருவாய்மொழி.

## தனியன்கள்.

(நாதமுனிகள் அருளிச்செய்தது.)

భక్తామృతంవిశ్వజనానుమోదనం।సర్వార్థదంశ్రీశఠకోపవాఙ్మయం।
సహస్రశాఖోపనిషత్సమాగమం।నమామ్యహంద్రావిడవేదసాగరం॥!

பக்தாம்ருதம்விஶ்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம்ஸ்ரீசடகோபவாங்மயம்-
ஸஹஸ்ரஶாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம்த்ராவிடவேதஸாகரம் !

(ஈஶ்வரமுனிகள் அருளிச்செய்தது.)

திருவழுதிநாடென்றும்தென்குருகூரென்றும் *
மருவினியவண்பொருநலென்றும் *—அருமறைக
ளந்தாதிசெய்தானடியிணையேயெப்போதும் *
சிந்தியாய்நெஞ்சே ! தெளிந்து,

(சொட்டைநம்பிகள் அருளிச்செய்தது.)

மனத்தாலும்வாயாலும் வண்குருகூர்பேணும் *
இனத்தாரையல்லா திறைஞ்சேன் *—தனத்தாலும்
ஏதும்குறைவிலே னெந்தைசடகோபன் *
பாதங்கள்யாமுடையபற்று!

(அநந்தாழ்வான் அருளிச்செய்தது.)

ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமாநுசமுனிதன் *
வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன் * ஆய்ந்தபெரும்
சீரார்சடகோபன் செந்தமிழ்வேதம்தரிக்கும் *
பேராதவுள்ளம்பெற !

(பட்டர் அருளிச்செய்தவை.)

வான்றிகழும்சோலை மதிளரங்கர்வண்புகழ்மேல் *
ஆன்றதமிழ்மறைகளாயிரமும் *—ஈன்ற
முதற்றாய்சடகோபன் மொய்ம்பால்வளர்த்த *
இதத்தாயிராமாநுசன் !
மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் *
தக்கநெறியும்தடையாகித்—தொக்கியலும் *
ஊழ்வினையும்வாழ்வினையு மோதும்குருகையர்கோன் *
யாழினிசைவேதத்தியல்!

(கலிவிருத்தம்.

ஸ்ரீ உயர்வறவுயர்நல முடையவன்யவனவன் *
மயர்வறமதிநல மருளினன்யவனவன் *
அயர்வறுமமரர்க ளதிபதியவனவன் *
துயரறுசுடரடி தொழுதெழென்மனனே ! (௧)

மனனகமலமற மலர்மிசையெழுதரும் *
மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன் *
இனனுணர்முழுநல மெதிர்நிகழ்கழிவினும் *
இனனிலனெனனுயிர்மிகுநரையிலனே ! (௨)

இலனதுவுடையனி தெனநினைவரியவன் *
நிலனிடைவிசும்பிடை யுருவினனருவினன் *
புலனொடுபுலனலனொழிவிலன்பரந்த * அந்
நலனுடையொருவனை நணுகினம்நாமே ! (௩)

நாமவனிவனுவ னவளிவளுவளெவள் *
தாமவரிவருவ ரதுவிதுவுதுவெது *
வீமவையிவையுவை யவைநலந்தீங்கவை *
ஆமவையாயவையாய்நின்றவவரே ! (௪)

அவரவர்தமதம தறிவறிவகைவகை *
அவரவரிறையவ ரெனவடியடைவர்கள் *
அவரவரிறையவர் குறைவிலரிறையவர் *
அவரவர்விதிவழி யடையநின்றனரே ! (௫)

நின்றனரிருந்தனர் கிடந்தனர்திரிந்தனர் *
நின்றிலரிருந்திலர் கிடந்திலர்திரிந்திலர் *
என்றுமோரியல்வின ரெனநினைவரியவர் *
என்றுமோரியல்வொடு நின்றவெந்திடரே. (௬)

திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை *
படர்பொருள்முழுவது மாயவையவைதொறும் *
உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும்பரந்துளன் *
சுடர்மிகுசுருதியு ளிவையுண்டசுரனே ! (௭)

சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும் *
வரன்முதலாயவை முழுதுண்டபரபரன் *
புரமொருமூன்றெரித் தமரர்க்குமறிவியந் *
அரனயனென வுலகழித்தமைத்துளனே! (௮)

உளனெனிலுள னவனுருவமிவ்வுருவுகள் *
உளனலனெனி லவனருவமிவ்வருவுகள் *
உளனெனவிலனென விவைகுணமுடைமையில் *
உளனிருதகைமையொ டொழிவிலன்பரந்தே! (௯)

பரந்ததண்பரவையுள் நீர்தொறும்பரந்துளன் *
பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவறக் *
கரந்தசிலிடந்தொறு மிடந்திகழ்பொருடொறும் *
கரந்தெங்கும்பரந்துள னிவையுண்டகரனே! (௧0)

ஸ்ரீ கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை *
வரனவில்திறல்வலி யளிபொறையாய்நின்ற *
பரனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொல் *
நிரனிறையாயிரத் திவைபத்தும்வீடே! (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

---

இதரவிஷயங்களை விட்டு பகவத்பக்தியைப்பண்ணி உஜ்ஜீவியுங்கோள் என்று உபதேசிக்கிறார்.

(வஞ்சித்துறை.)

ஸ்ரீ வீடுமின்முற்றவும் *
வீடுசெய்தும்முயிர் *
வீடுடையானிடை *
வீடுசெய்ம்மினே! (௧)

மின்னின்நிலையில *
மன்னுயிராக்கைகள் *
என்னுமிடத்திறை *
யுன்னுமினீரே! (௨)

நீர்நுமதென்றிவை *
வேர்முதல்மாய்த்திறை *
சேர்மினுயிர்க்கத *
னேர்நிறையில்லே! (௩)

இல்லதுமுள்ளதும் *
அல்லதவனுரு *
எல்லையிலந்நலம் *
புல்குபற்றற்றே! (௪)

அற்றதுபற்றெனில் *
உற்றதுவீடுயிர் *
செற்றதுமன்னுறில் *
அற்றிறைபற்றே! (௫)

பற்றிலனீசனும் *
முற்றவும்நின்றனன் *
பற்றிலையாயவன் *
முற்றிலடங்கே! (௬)

அடங்கெழில்சம்பத்து *
அடங்கக்கண்டீசன் *
அடங்கெழிலஃதென்று *
அடங்குகவுள்ளே! (௭)

உள்ளமுரைசெயல் *
உள்ளவிம்மூன்றையும் *
உள்ளிக்கெடுத்திறை *
உள்ளிலொடுங்கே! (௮)

ஒடுங்கவவன்கண் *
ஒடுங்கலுமெல்லாம் *
விடும்பின்னுமாக்கை *
விடும்பொழுதெண்ணே ! (கூ)

ஸ்ரீ எண்பெருக்கந்நலத்
தொண்பொருளீறில *
வண்புகழ்நாரணன் *
திண்கழல்சேரே !

ஸ்ரீ சேர்த்தடத் * தென்குரு
கூர்ச்சடகோபன்சொல்
சீர்த்தொடையாயிரத் *
தோர்த்தவிப்பத்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

---

இளமைகெடுவதன்முன்னம் திருமாலிருஞ்சோலைமலையைச்சேர்ந்துய்யும்படி உபதேசிக்கிறார்.

(கலிவிருத்தம்.)

ஸ்ரீ கிளரொளியிளமை கெடுவதன்முன்னம் *
வளரொளிமாயோன் மருவியகோயில் *
வளரிளம்பொழில்சூழ்மாலிருஞ்சோலை *
தளர்விலராகில் சார்வதுசதிரே! (க)

சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியா *
அதிர்குரல்சங்கத் தழகர்தங்கோயில் *
மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை
பதியதுவேத்தி யெழுவதுபயனே! (உ)

பயனல்லசெய்து பயனில்லைநெஞ்சே !
புயல்மழைவண்ணர் புரிந்துறைகோயில் *
மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை *
அயன்மலையடைவதது கருமமே ! (௩)

கருமவன்பாசம் கழித்துழன்றுயவே *
பெருமலையெடுத்தான் பீடுறைகோயில் *
வருமழைதவழும் மாலிருஞ்சோலை *
திருமலையதுவே யடைவதுதிறமே ! (௪)

திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது *
அறமுயலாழிப் படையவன்கோயில் *
மறுவில்வண்சுனைசூழ் மாலிருஞ்சோலை *
புறமலைசாரப் போவதுகிறியே ! (௫)

கிறியெனநினைமின் கீழ்மைசெய்யாதே *
உறியமர்வெண்ணெய் உண்டவன்கோயில் *

மறியொடுபிணைசேர் மாலிருஞ்சோலை *
நெறிபடவதுவே நினைவதுநலமே! (௬)
நலமெனநினைமின் நரகழுந்தாதே *
நிலமுனமிடந்தான் நீடுறைகோயில் *
மலமறுமதிசேர் மாலிருஞ்சோலை *
வலமுறையெய்தி மருவுதல்வலமே! (௭)
வலஞ்செய்துவைகல் வலங்கழியாதே *
வலஞ்செய்யும் ஆயமாயவன்கோயில் *
வலஞ்செய்யும்வானோர் மாலிருஞ்சோலை *
வலஞ்செய்துநாளும் மருவுதல்வழக்கே! (௮)
வழக்கெனநினைமின் வல்வினைமூழ்காது *
அழக்கொடியட்டா னமர்பெருங்கோயில் *
மழக்களிற்றினஞ்சேர் மாலிருஞ்சோலை *
தொழக்கருதுவதே துணிவதுசூதே! (௯)
சூதென்றுகளவும் சூதுசெய்யாதே *
வேதமுன்விரித்தான் விரும்பியகோயில் *
மாதுறுமயில்சேர் மாலிருஞ்சோலை *
போதவிழ்மலையே புகுவதுபொருளே! (௧0)
பொருளென்றிவ்வுலகம் படைத்தவன்புகழ்மேல் *
மருளில்வண்குருகூர் வண்சடகோபன் *
தெருள்கொள்ளச்சொன்ன வோராயிரத்துளிப்பத் *
தருளுடையவன்தா ளணைவிக்கும்முடித்தே! (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

---

தெற்குத்திருமலையில் தாமநுபவிக்கக்கோலி, பெறாதுசோகிக்கிற ஆழ்வார்க்கு ஈசுவரன் வடக்குத்திருமலையைக்காட்டக் கண்டு நிலைபெறுகிறார்.

———(:0:)———

(கலிவிருத்தம்.)

ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி *
வழுவிலாவடிமைசெய்யவேண்டும் நாம் *
தெழிகுரலருவித் திருவேங்கடத்து *
எழில்கொள்சோதி யெந்தைதந்தைதந்தைக்கே! (௧)

எந்தைதந்தைதந்தை தந்தைதந்தைக்கும்
முந்தை * வானவர்வானவர்கோனொடும் *
சிந்துபூமகிழும் திருவேங்கடத்து *
அந்தமில்புகழ்க் காரெழிலண்ணலே ! (உ)

அண்ணல்மாய னணிகொள்செந்தாமரைக்
கண்ணன் * செங்கனிவாய்க் கருமாணிக்கம் *
தெண்ணிறைச்சுனைநீர்த் திருவேங்கடத் *
தெண்ணில்தொல்புகழ் வானவரீசனே ! (௩)

“ஈசன்வானவர்க்” கென்பனென்றாலது *
தேசமோ திருவேங்கடத்தானுக்கு ?
நீசனேன் நிறைவொன்றுமிலேனென்கட் *
பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே ! (௪)

“சோதியாகி யெல்லாவுலகுந்தொழும் *
ஆதிமூர்த்தி” யென்றா லளவாகுமோ ?
“வேதியர் முழுவேதத்தமுதத்தைத் *
தீதில்சீர்த் திருவேங்கடத்தானையே ! (௫)

வேங்கடங்கள் மெய்மேல்வினைமுற்றவும் *
தாங்கடங்கட்கு நல்லனவேசெய்வார் *
வேங்கடத்துறைவார்க்கு “நமவென்னல்”
ஆங்கடமை * அதுசுமந்தார்கட்கே ! (௬)

சுமந்துமாமலர் நீர்சுடர்தூபங்கொண் *
டமர்ந்துவானவர் வானவர்கோனொடும் *
நமன்றெழுந் திருவேங்கட நங்கட்குச் *
சமன்கொள்வீடுதருந் தடங்குன்றமே ! (௭)

ஸ்ரீ குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன் *
அன்றுஞாலமளந்தபிரான் — பரன் *
சென்றுசேர் திருவேங்கடமாமலை *
ஒன்றுமேதொழ நம்வினையோயுமே ! (௮)

ஓயுமூப்புப்பிறப்பிறப்புப் பிணி *
வீயுமாறுசெய்வான் திருவேங்கடத் *
தாயனுண்மலரா மடித்தாமரை *
வாயுள்ளும்மனத்துள்ளும் வைப்பார்கட்கே ! (௯)

வைத்தநாள்வரை யெல்லைகுறுகிச்சென் *
றெய்த்திளைப்பதன்முன்ன மடைமினோ! *
பைத்தபாம்பணையான் திருவேங்கட *
மொய்த்தசோலை மொய்பூந்தடம்தாழ்வரே (௧௦)

தாள்பரப்பி மண்தாவியவீசனை *
நீள்பொழில் குருகூர்ச்சடகோபன்சொல் *
கேழிலாயிரத் திப்பத்தும்வல்லவர் *
வாழ்வர்வாழ்வெய்தி ஞாலம்புகழவே ! (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

---

† [குறைதீர்ந்தஇவர், இதரவிஷயங்களை ஸ்தோத்ரம்செய்யாதே
"திருநாரணன் திருவடியைப்பஜியுங்கோள்"
என்றுஉபதேசிக்கிறார்.

ஒருநாயகமாயோடவுலகுடனாண்டவர் *
கருநாய்கவர்ந்தகாலர் சிதைகியபானையர் *
பெருநாடுகாண இம்மையிலே பிச்சைதாம்கொள்வர் *
திருநாரணன்தாள் காலம்பெறச்சிந்தித்துய்மினோ ! (௧)

உய்ம்மின்திறைகொணர்ந் தென்றுலகாண்டவரிம்மையே *
தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளத்தாம்விட்டு *
வெம்மினொளிவெயில் கானகம்போய்க்குமைதின்பர்கள் *
செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ ! (௨)

அடிசேர்முடியினராகி யரசர்கள்தாம்தொழ *
இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்பவிருந்தவர் *
பொடிசேர்துகளாய்ப் போவர்களாதலில்நொக்கெனக் *
கடிசேர்துழாய்முடிக் கண்ணன்கழல்கள்நினைமினோ! (௩)

நினைப்பான்புகில் கடலெக்கலில்நுண்மணலில்பலர் *
எனைத்தோருகங்களு மிவ்வுலகாண்டுகழிந்தவர் *
மனைப்பால்மருங்கற மாய்தலல்லால்மற்றுக்கண்டிலம் *
பனைத்தாள்மதகளிறட்டவன் பாதம்பணிமினோ ! (௪)

---

† இந்தத்திருவாய்மொழி - திருநாரணன் விஷயமாகையால், திருநாராயணபுரம் முதலான மேனாட்டு திவ்யதேசங்களில் வழங்குகிறார்கள்.

பணிமின்திருவருளென்னு மஞ்சீதப்பைம்பூம்பள்ளி *
அணிமென்குழலா ரின்பக்கலவியமுதுண்டார் *
துணிமுன்புநாலப் பல்லேழையர்தாமிழிப்பச்செல்வர் *
மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினோ ! (௫)

வாழ்ந்தார்கள்வாழ்ந்தது மாமழைமொக்குளின்மாய்ந்துமாய்ந் *
தாழ்ந்தாரென்றல்லா லன்றுமுதலின்றறுதியா *
வாழ்ந்தார்கள்வாழ்ந்தேநிற்ப வென்பதில்லைநிற்குறில் *
ஆழ்ந்தார்கடற்பள்ளி யண்ணலடியவராமினோ ! (௬)

ஆமின்சுவையவை யாறோடடிசிலுண்டார்ந்தபின் *
தூமென்மொழிமடவாரிரக்கப் பின்னும்துற்றுவார் *
ஈமினெமக்கொருதுற்றென் றிடறுவராதலில் *
கோமின்துழாய்முடி யாதியஞ்சோதிகுணங்களே ! (௭)

குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கொடைக்கடன்பூண்டிருந்து *
இணங்கியுலகுடனாக்கிலு மாங்கவனையில்லார் *
மணங்கொண்டபோகத்து மன்னியும்மீள்வர்கள்மீள்வில்லைப் *
பணங்கொளரவணையான் திருநாமம்படிமினோ ! (௮)

படிமன்னுபல்கலன் பற்றோடறுத்தைம்புலன்வென்று *
செடிமன்னுகாயம்செற்றார்களு மாங்கவனையில்லார் *
குடிமன்னுமின்சொர்க்கமெய்தியும் மீள்வர்கள்மீள்வில்லை *
கொடிமன்னுபுள்ளுடை யண்ணல்கழல்கள்குறுகுமினோ ! (௯)

குறுகமிகவுணர்வத்தொடு நோக்கியெல்லாம்விட்ட *
இறுகலிறப்பென்னும் ஞானிக்குமப்பயனில்லையேல் *
சிறுகநினைவதோர்பாசமுண்டாம் பின்னும்வீடில்லை *
மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில்வீடஃதே. (௧௦)

ஸ்ரீ அஃதேயுய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல் *
கொய்பூம்பொழில்சூழ்குருகூர்ச் சடகோபன்குற்றேவல் *
செய்கோலத்தாயிரம் சீர்த்தொடைப்பாடலிவைபத்தும் *
அஃகாமல்கற்பவ ராழ்துயர்போயுய்யற்பாலரே ! (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

இதரதேவதைகள்பக்கல்ஆரோபித்துள்ள பரத்வசங்கையையறுத்து ஸர்வஸ்ரஷ்டாவான நாராயணன் தான் ஸந்நிதிகொண்டு திருநகரியிலே ஸந்நிஹிதமானுனைகையால் அவனை யாச்ரயியுங்கோ ளென்றருளிச் செய்கிறார்.

---

(அறுசீராசிரிய விருத்தம்.)

ஒன்றுந்தேவு முலகுமுயிரும்மற்றும் யாதுமில்லா
அன்று * நான்முகன்றன்னொடு தேவருலகோடுயிர்படைத்தான்! *
குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள் *
நின்றவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்நாடுதிரோ? (க)

நாடிநீர்வணங்குந்தெய்வமு மும்மையுமுன்படைத்தான் *
வீடில்சீர்ப்புகழாதிப்பிரா னவன்மேவியுறைகோயில் *
மாடமாளிகைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனைப் *
பாடியாடிப்பரவிச்சென்மின்கள் பல்லுலகீர்பரந்தே! (உ.)

பரந்ததெய்வமும் பல்லுலகும்படைத்தன்றுடனேவிழுங்கிக் *
கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர்! *
சிரங்களாலமரர்வணங்கும் திருக்குருகூரதனுள் *
பரன்திறமன்றிப்பல்லுலகீர்! தெய்வம்மற்றில்லைபேசுமினே? (ங)

பேசநின்றசிவனுக்கும் பிரமன்றனக்கும்பிறர்க்கும்
நாயகனவனே! * கபாலநன்மோக்கத்துக்கண்டுகொண்மின்! *
தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள் *
ஈசன்பாலோரவம்பறைத லென்னாவதிலிங்கியர்க்கே? (ச)

இலிங்கத்திட்டபுராணத்தீரும்! சமணரும்! சாக்கியரும்! *
§ வலிந்துவாதுசெய்வீர்களும்! மற்றுநுந்தெய்வமுமாகிநின்றான் *
மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள் *
பொலிந்துநின்றபிரான்கண்டீரொன்றும் பொய்யில்லைபோற்றுமினே!

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டும்மையின்னே *
தேற்றிவைத்ததெல்லீரும்வீடுபெற்றா லுலகில்லையென்றே *
சேற்றிற்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள் *
ஆற்றவல்லவன்மாயங்கண்டீ ரதறிந்தறிந்தோடுமினே! (சு)

---

§ "மலிந்து" என்றுபாடாந்தரம்.

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்றோர்தெய்வம *
பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறிக்கண்டீர்! *
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள் *
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக் கடிமைபுகுவதுவே! (எ)

புக்கடிமையினால் தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை *
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே! *
கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள் *
மிக்கவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரோ? (அ)

விளம்புமாறுசமயமு மவையாகியும்மற்றும்தன்பால் *
அளந்துகாண்டற்கரியனாகிய வாதிப்பிரானமரும் *
வளங்கொள்தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
உளங்கொள்ஞானத்துவைம்மினும்மையுய்யக்கொண்டுபோகுறிலே.

உறுவதாவதெத்தேவுமெவ்வுலகங்களும் மற்றும்தன்பால் *
மறுவில்மூர்த்தியோடொத் தித்தனையும்நின்றவண்ணம்நிற்கவே *
செறுவிற்செந்நெல்கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள் *
குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே! (கo)

ஆட்செய்தாழிப்பிரானைச் சேர்ந்தவன்வண்குருகூர்நகரான் *
நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன் *
வேட்கையாற்சொன்னபாட லாயிரத்துளிப்பத்தும்வல்லார் *
மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே! (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

———(*)———

ஈசுவரன் தர்மபரஸ்பர்மமாவார்த்தைகளொன்றும் செய்யாமையா
லேபுக்கு தம்மபேகூறிதங்களைக்கிட்டுவோமென்று கிட்டாமல்
அவஸந்நராகிறார்.

———(*)———

(அறுசீராசிரிய விருத்தம்.)

ஆராவமுதே! யடியேனுடலம் நின்பாலன்பாயே *
நீராயலைந்து கரையவுருக்குகின்றநெடுமாலே! *
சீரார்செந்நெல் கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை *
ஏரார்கோலந்திகழக்கிடந்தாய்! கண்டேனெம்மானே! * (க)

எம்மானே! யென்வெள்ளைமூர்த்தி! யென்னையாள்வானே! *
எம்மாவுருவும்வேண்டுமாற்றா லாவாயெழிலேறே! *
செம்மாகமலம் செழுநீர்மிசைகண்மலரும் திருக்குடந்தை *
அம்மாமலர்க்கண்வளர்கின்றானே! யென்நான்செய்கேனே! (௨)

என்நான்செய்கேன்! யாரேகளைக ணென்னையென்செய்கின்றாய்? *
உன்னாலல்லால்யாவராலும் மொன்றுங்குறைவேண்டேன் *
கன்னார்மதிள்சூழ் குடந்தைக்கிடந்தாய்! அடியேனருவாணாள் *
சென்னாளெந்நாளந்நா ளுனதாள்பிடித்தேசெலக்காணே! (௩)

செலக்காண்கிற்பார்காணுமளவும் செல்லுங்கீர்த்தியாய்! *
உலப்பிலானே! யெல்லாவுலகு முடையவொருமூர்த்தி! *
நலத்தால்மிக்கார்குடந்தைக்கிடந்தாய்! உன்னைக்காண்பான்நான்
அலப்பாய் * ஆகாசத்தைநோக்கி யழுவன்தொழுவனே! (௪)

அழுவன்தொழுவனாடிக்காண்பன் பாடியலற்றுவன் *
தழுவல்வினையால்பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன் *
செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்! செந்தாமரைக்கண்ணா! *
தொழுவனேனையுனதாள் சேரும்வகையேசூழ்கண்டாய்! (௫)

சூழ்கண்டாய்! என்தொல்லைவினையையறுத் துன்னடிசேரும்
ஊழ்கண்டிருந்தே* தூராக்குழிதூர்த் தெனைநாளகன்றிருப்பன் *
வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய்! வானோர்கோமானே! *
யாழினிசையே! யமுதே! யறிவின்பயனே! யரியேறே! (௬)

அரியேறே! யென்னம்பொற்சுடரே! செங்கட்கருமுகிலே! *
எரியேபவளக்குன்றே! நாற்றோளெந்தாய்! உனதருளே *
பிரியாவடிமையென்னைக்கொண்டாய்! குடந்தைத்திருமாலே! *
தரியேனினியுன்சரணம் தந்தென்சன்மங்களையாயே! (௭)

ஸ்ரீ களைவாய்துன்பங்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன் *
வளைவாய்நேமிப்படையாய்! குடந்தைக்கிடந்தமாமாயா! *
தளராவுடலமெனதாவி சரிந்துபோம்போது *
இளையாதுனதாளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே ! (௮)

இசைவித்தென்னையுன்தாளிணைக்கீ ழிருத்துமம்மானே! *
அசைவிலமரர்தலைவர்தலைவா! ஆதிப்பெருமூர்த்தி! *
திசைவில்வீசும்செழுமாமணிகள்சேரும் திருக்குடந்தை *
அசைவிலுலகப்பரவக்கிடந்தாய்! காணவாராயே ! (௯)

வாராவருவாய்வருமென்மாயா! மாயாமூர்த்தியாய் *
ஆராவமுதாயடியேனுவி யகமேதித்திப்பாய் ! *
தீராவினைகள்தீரவென்னையாண்டாய் ! திருக்குடந்தை
ஊரா ! உனக்காட்பட்டு மடியேனின்னமுழல்வனோ? (௧0)

ஃஃ உழலையென்பில்பேய்ச்சிமுலையூ டவளையுயிருண்டான் *
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன் *
குழலின்மலியச்சொன்ன வோராயிரத்துளிப்பத்தும் *
மழலைதீரவல்லார் காமர்மானேய்நோக்கியர்க்கே ! (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

---

திருமலையிலேநாய்ச்சிமாருடனேகூடிநின்றருளின வௌபீல்யத்
தைக்கண்டுபெரியபிராட்டிமுன்னிலையாக அநந்யகதித்வத்
தை விண்ணப்பம்செய்து சரணம்புக்கு தம்முடைய
அத்யவஸாயத்தை யறிவிக்கிறார்.

——(*)——

(அறுசீராசிரிய விருத்தம்.)

ஃஃ உலகமுண்டபெருவாயா! வுலப்பில்கீர்த்தியம்மானே !*
நிலவும்சுடர்சூழொளிமூர்த்தி! நெடியாயடியேனாருயிரே!*
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே !*
குலதொலலடியேனுனபாதம் கூடுமாறுகூறாயே! (௧)

கூறாய்நீறாய்நிலனாகிக் கொடுவல்லசுரர்குலமெல்லாம் *
சீறாவெரியும்திருநேமிவலவா! தெய்வக்கோமானே! *
சேறார்சுனைத்தாமரைசெந்தீமலரும் திருவேங்கடத்தானே!*
ஆறாவன்பிலடியே னுன்னடிசேர்வண்ணமருளாயே! (௨)

வண்ணமருள்கொளணிமேகவண்ணா! மாயவம்மானே !
எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே! யிமையோரதிபதியே! *
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்கும்திருவேங்கடத்தானே! *
அண்ணலே! யுன்னடிசேர அடியேற்காவாவென்னாயே! (௩)

ஆவாவென்னாதுலகத்தையலைக்கு மசுரர்வாணாள்மேல் *
தீவாய்வாளிமழைபொழிந்தசிலையா! திருமாமகள்கேள்வா!
தேவா ! சுரர்கள்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே!
பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறுபுணராயே! (௪)

புணராநின்றமரமேழன்றெய்த வொருவில்வலவாவோ! *
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோனமுதல்வாவோ! *
திணரார்மேகமெனக்களிறுசேரும் திருவேங்கடத்தானே! *
திணரார்சார்ங்கத்துனபாதம் சேர்வதடியேனெந்நாளே! (௫)

எந்நாளேநாம் மண்ணளந்தவிணைத்தாமரைகள்காண்பதற்கென் *
றெந்நாளுநின்றிமையோர்களேத்தி யிறைஞ்சியினமினமாய் *
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யும்திருவேங்கடத்தானே! *
மெய்ந்நானெய்தியெந்நா ளுன்னடிக்களடியேன்மேவுவதே! (௬)

அடியேன்மேவியமர்கின்றவமுதே! யிமையோரதிபதியே! *
கொடியாவடுபுள்ளுடையானே! கோலக்கனிவாய்ப்பெருமானே! *
செடியார்வினைகள்தீர்மருந்தே! திருவேங்கடத்தெம்பெருமானே! *
நொடியார்பொழுதுமுனபாதம் காணநோலாதாற்றேனே! (௭)

நோலாதாற்றேனுனபாதம் காணவென்றுநுண்ணுணர்வில் *
நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனுமிந்திரனும் *
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்பும் திருவேங்கடத்தானே ! *
மாலாய்மயக்கியடியேன்பால் வந்தாய்போலேவாராயே! (௮)

வந்தாய்போலேவாராதாய்! வாராதாய்போல்வருவானே! *
செந்தாமரைக்கட்செங்கனிவாய் நாற்றோளமுதே! யெனதுயிரே! *
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய் திருவேங்கடத்தானே! *
அந்தோ! அடியேனுனபாத மகலகில்லேனிறையுமே. (௯)

"அகலகில்லேனிறையு" மென்றலர்மேல்மங்கையுறைமார்பா *
நிகரில்புகழாயுலகமூன்றுடையா யென்னையாள்வானே ! *
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்புந் திருவேங்கடத்தானே! *
புகலொன்றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே! (௧0)

அடிக்கீழமர்ந்துபுகுந்தடியீர் வாழ்மினென்றென்றருள்கொடுக்கும் *
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும் *
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள்நிலாவுவரே! (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

---:0:---

சரணம்புக்கும் தம்மபேக்ஷிதம் பெறாமையாலே
ஈச்வரன் கைவிட்டானாகவெண்ணி, தம்மையும் ஸம்ஸாரியாகச்
சங்கித்து, என்னை விடாதொழிய வேணுமென்று
அவன் குணங்களைச் சொல்லிக்கூப்பிடுகிறார்.

---

எழுசீராசிரியவிருத்தம்.

ஃஃகங்குலும்பகலும்கண்டுயிலறியாள்
கண்ணநீர்கைகளாலிறைக்கும் !*
சங்குசக்கரங்களென்றுகைகூப்பும்!
தாமரைக்கண்ணென்றேதளரும் !*
எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னும்!
இருநிலம்கைதுழாவிருக்கும் !*
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாய்!
இவள்திறத்தென்செய்கின்றாயே! (க)

"என்செய்கின்றாயென்தாமரைக்கண்ணா?"
என்னும் கண்ணீர்மல்கவிருக்கும்! *
"என்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாய்"
என்னும் வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்! *
முன்செய்தவினையேமுகப்படாயென்னும்
முகில்வண்ணா! ‡ தகுவதோவென்னும் *
முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய்!
என்கொலோமுடிகின்றதிவட்கே? (உ)

வட்கிலளிறையும் மணிவண்ணா! வென்னும்
வானமேநோக்கும்மையாக்கும்! *
உட்குடையசுரருயிரெல்லாமுண்ட
வொருவனே! யென்னுமுள்ளுருகும்! *
கட்கிலீ! யுன்னைக்காணுமாறருளாய்
காகுத்தா! கண்ணனே! யென்னும் *
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாய்!
இவள்திறத்தென்செய்திட்டாயே? (ங)

இட்டகாலிட்டகையளாயிருக்கும்!
எழுந்துலாமயங்கும் கைகூப்பும் *

---

‡ "தகவிதோ" என்று பாடாந்தரம்.

கட்டமே காதலென்றுமூர்ச்சிக்கும்
கடல்வண்ணா! கடியைகாணென்னும்! *
வட்டவாய்நேமிவலங்கையா! வென்னும்
வந்திடாயென்றென்றேமயங்கும்
சிட்டனே! செழுநீர்த்திருவரங்கத்தாய்!
இவள்திறத்தென்சிந்தித்தாயே! (௪)

சிந்திக்குந்திசைக்கும் தேறும்கைகூப்பும்
திருவரங்கத்துள்ளாயென்னும்!
வந்திக்கும் * ஆங்கேமழைக்கண்ணீர்மல்க
வந்திடாயென்றென்றே மயங்கும் *
அந்திப்போதவுணனுடலிடந்தானே!
அலைகடல்கடைந்தவாரமுதே! *
சந்தித்துன்சரணம் சார்வதேவலித்த
தையலை மையல்செய்தானே! (௫)

மையல்செய்தென்னைமனங்கவர்ந்தானே!
யென்னும்மாமாயனே! யென்னும் *
செய்யவாய்மணியே! யென்னும் தண்புனல்சூழ்
திருவரங்கத்துள்ளாயென்னும் *
வெய்யவாள்தண்டுசங்குசக்கரம்
வில்லேந்தும் விண்ணோர்முதலென்னும் *
பைகொள்பாம்பணையா யிவள்திறத்தருளாய்
பாவியேன்செய்யற்பாலதுவே! (௬)

பாலதுன்பங்களின்பங்கள் படைத்தாய்!
பற்றிலார்பற்றநின்றானே! *
காலசக்கரத்தாய்! கடலிடங்கொண்ட
கடல்வண்ணா! கண்ணனே! யென்னும் *
சேல்கொள்தண்புனல்சூழ் திருவரங்கத்தா
யென்னும் என்தீர்த்தனே! யென்னும் *
கோலமாமழைக்கண் பனிமல்கவிருக்கும்
என்னுடைக்கோமளக்கொழுந்தே! (௭)

கொழுந்துவானவர்கட்கென்னும்; குன்றேந்திக்
கோநிரைகாத்தவனென்னும் *
அழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்கும்!

அஞ்சனவண்ணனே! யென்னும் *
எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கும்
எங்ஙனே நோக்குகேனென்னும் *
செழுந்தடம்புனல்சூழ் திருவரங்கத்தாய்!
என்செய்கேனென்திருமகட்கே! (அ)

என்திருமகள்சேர்மார்பனே! யென்னும்
என்னுடையாவியே! யென்னும் *
நின்திருவெயிற்றாலிடந்து நீகொண்ட
நிலமகள்கேள்வனே! யென்னும் *
அன்றுருவேழும் தழுவிநீகொண்ட
ஆய்மகளன்பனே! யென்னும் *
தென்திருவரங்கம் கோயில்கொண்டானே!
தெளிகிலேன் முடிவிவள்தனக்கே! (௯)

முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும்
மூவுலகாளியே! யென்னும் *
கடிகமழ்கொன்றைச்சடையனே யென்னும் !
நான்முகக்கடவுளே! யென்னும் *
வடிவுடைவானோர்தலைவனே! யென்னும்
வண்திருவரங்கனே! யென்னும் *
அடியடையாதாள்போலிவளணுகி
யடைந்தனள் முகில்வண்ணனடியே! (௧௦)

முகில்வண்ணனடியையடைந்தருள்சூடி
யுய்ந்தவன் மொய்புனற்பொருநல் *
துகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன் வண்பொழில்சூழ்
வண்குருகூர்ச்சடகோபன் *
முகில்வண்ணனடிமேற்சொன்னசொல்மாலை
யாயிரத்திப்பத்தும்வல்லார் *
முகில்வண்ணவானத்திமையவர்சூழ
விருப்பர் பேரின்பவெள்ளத்தே! (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

---

பிரணவநமஸ்ஸுக்களில் போதரும் அநந்யார்ஹசேஷத்வத்து க்கு ஸீமாபூமி ததீயசேஷத்வமாகையாலே, அத்ததீயர்க்கு க்ரய விக்ரயார்ஹமான சேஷத்வத்தைப் பிரார்த்திக்கிறார்.

——(:o:)——

(அறுசீராசிரியவிருத்தம்.)

ஶ்ரீ நெடுமாற்கடிமைசெய்வேன்போ லவனைக்கருதவஞ்சித்துத்
தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றும்தவிர்ந்தசதிர்நினைந்தால் *
கொடுமாவினையேனவனடியாரடியே கூடுமிதுவல்லால் *
விடுமாறென்பதென்னந்தோ! வியன்மூவுலகுபெறினுமே! (க)

வியன்மூவுலகுபெறினும் போய்த் தானேதானேயானாலும் *
புயல்மேகம்போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ்ச் *
சயமேயடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி * யிம்மையே
பயனேயின்பம்யான்பெற்ற துறுமோபாவியேனுக்கே? (உ.)

உறுமோபாவியேனுக் கிவ்வுலகமூன்றுமுடனிறையச் *
சிறுமாமேனிநிமிர்த்த வென்செந்தாமரைக்கண்திருக்குறளன் *
நறுமாவிரைநான்மலரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார் *
சிறுமாமனிசராயென்னையாண்டா ரிங்கேதிரியவே! (௩)

இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென் னிருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த *
செங்கோலத்தபவளவாய்ச் செந்தாமரைக்கணென்னம்மான் *
பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப் புலன்கொள்வடிவென்மனத்ததாய் *
அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடவருளிலே! (௪)

வழிபட்டோடவருள்பெற்று மாயன்கோலமலரடிக்கீழ்ச் *
சுழிபட்டோடும்சுடர்ச்சோதிவெள்ளத் தின்புற்றிருந்தாலும்
இழிபட்டோடுமுடலினிற்பிறந்து தன்சீர்யான்கற்று *
மொழிபட்டோடும்கவியமுதம் நுகர்ச்சியுறுமோமுழுதுமே! (௫)

நுகர்ச்சியுறுமோமூவுலகின் வீடுபேறுதன்கேழில் *
புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னாழிக்கையென்னம்மான் *
நிகர்ச்செம்பங்கியெரிவிழிகள் நீண்டவசுரருயிரெல்லாம் *
தகர்த்துண்டுழலும்புட்பாகன் பெரியதனிமாப்புகழே. (௬)

தனிமாப்புகழேயெஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த்தான்தோன்றி *
முனிமாப்பிரமமுதல்வித்தா யுலகமூன்றுமுளைப்பித்த *
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார் *
கனிமாக்கலவியின்பமே நாளும்வாய்க்கநங்கட்கே! (௭)

நாளும்வாய்க்கநங்கட்கு ளனிர்நீர்க்கடலைப்படைத்துத் * தன்
தாளும்தோளும்முடிகளும் சமனிலாதபலபரப்பி *
நீளும்படர்பூங்கற்பகக்காவு நிறைபன்மதியின் *
கோளுமுடையமணிமலைபோல் கிடந்தான்தமர்கள்கூட்டமே! (அ)

தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யும்சதிர்மூர்த்தி *
அமர்கொளாழிசங்குவாள் வில்தண்டாதிபல்படையன் *
குமரன்கோலவைங்கணைவேள் தாதை கோதிலடியார்தம் *
தமர்கள்தமர்கள்தமர்களாம் சதிரேவாய்க்கதமியேற்கே! (கூ)

வாய்க்கதமியேற்கூழிதோறூழியூழி * மாகாயாம்
பூக்கொள்மேனிநான்குதோள் பொன்னாழிக்கையென்னம்மான் *
நீக்கமில்லாவடியார்தம் மடியாரடியாரடியாரெங்
கோக்கள் * அவர்க்கேகுடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடே! ()

ஶ்ரீ நல்லகோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும்தான்நிறைந்த *
அல்லிக்கமலக்கண்ணனை யந்தண்குருகூர்ச்சடகோபன் *
சொல்லப்பட்டவாயிரத்து ளிவையும்பத்துவல்லார்கள் *
நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே! (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

---

சரீராவஸாநஸமயத்தில் இவன்பக்கல் ஆத்மஸமர்ப்பணம்பண்ணி
ப்ராப்யபூமியிலேபோக்காமல் நமக்காக்கிக்கொள்ளுகிறே
மென்னும் ஈசுவரனைவழித்துணையாகப் பற்றுதல்.

———(:o:)———

(கலிவிருத்தம்.)

ஶ்ரீமாலைநண்ணித் தொழுதெழுமினோ! வினைகெடக் *
காலைமாலை கமலமலரிட்டுநீர் *
வேலைமோதும்மதிள்சூழ் திருக்கண்ணபுரத்து *
ஆலின்மேலாலமர்ந்தா னடியிணைகளே! (க)

கள்ளவிழும்மலரிட்டு நீரிறைஞ்சுமின் *
நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை *
வெள்ளியேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
உள்ளி* நாளும்தொழுதெழுமினோதொண்டரே! (உ)

தொண்டர்நுந்தம்துயர்போக நீரேகமாய் *
விண்டுவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின் *

வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத்
தண்டவாணன் * அமரர்பெருமானையே! (௩)

மானைநோக்கி மடப்பின்னை தன்கேள்வனை *
தேனைவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின் *
வானையுந்துமதிள்சூழ் திருக்கண்ணபுரம் *
தானயந்தபெருமான் சரணாகுமே! (௪)

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான் *
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் * தனதன்பர்க்கன்பாகுமே! (௫)

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
செம்பொனாகத் தவுணனுடல்கீண்டவன் *
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தன்பன் * நாளும்தனமெய்யர்க்குமெய்யனே! (௬)

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம் *
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம் *
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்
தையன் * ஆகத்தணைப்பார்கட்கணியனே! (௭)

அணியனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
பிணியும்சாரா பிறவிகெடுத்தாளும் *
மணிபொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின் * நாளும்பரமேட்டிதன்பாதமே! (௮)

பாதநாளும்பணியத் தணியும்பிணி *
ஏதம்சாரா வெனக்கேலினியென்குறை? *
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்
தாதியானை * அடைந்தார்க்கல்லலில்லையே! (௯)

இல்லையல்ல லெனக்கேலினியென்குறை ?*
அல்லிமாத ரமரும்திருமார்பினன் *
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல * நாளும்துயர் பாடுசாராவே. (௧0)

ஃஃபாடுசாராவினை பற்றறவேண்டுவீர் ! *
மாடநீடு குருகூர்ச்சடகோபன் * சொற்
பாடலானதமி ழாயிரத்துளிப்பத்தும்
பாடியாடிப் * பணிமினவன்தாள்களே! (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஈசுவரன், ஆழ்வாருக்கு அர்ச்சிராதிமார்க்கத்தையும், ஆதிவாஹிக ஸத்காரங்களையும், பரமபதத்தையும், தானும் நித்தியஸூரிகளும் பிராட்டிமாரும் எதிரேவந்து ஆதரிக்கும்படியையும், நித்திய ஸூரிஸேவிதராய் பிராட்டியோடு வீற்றிருக்கும்படியைக்கண்டு தான் ஆநந்த நிர்ப்பரனாயிருக்கிறபடியையும் காட்ட, அதைக்கண்டு ஆழ்வார் ப்ரீதராதல்.

---

(கலிவிருத்தம்.)

ஸ்ரீசூழ்விசும்பணிமுகில் தூரியமுழக்கின *
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின *
ஏழ்பொழிலும் வளமேந்திய என்னப்பன் *
வாழ்புகழ்நாரணன்தமரைக் கண்டுகந்தே ! (௧)

நாரணன்தமரைக்கண்டுகந்து நன்னீர்முகில் *
பூரணபொற்குடம் பூரித்ததுயர்விண்ணில் *
நீரணிகடல்கள் நின்றார்த்தன * நெடுவரைத்
தோரணம்நிரைத்தெங்கும் தொழுதனருலகே ! (௨)

தொழுதனருலகர்கள் தூபநன்மலர்மழை
பொழிவனர் * பூமியன்றளந்தவன்தமர்முன்னே *
எழுமினென் றிருமருங்கிசைத்தனர்முனிவர்கள் *
வழியிதுவைகுந்தர்க் கென்றுவந்தெதிரே ! (௩)

எதிரெதிரிமையவ ரிருப்பிடம்வகுத்தனர் *
கதிரவரவரவர் கைந்நிரைகாட்டினர் *
அதிர்குரல்முரசங்க ளலைகடல்முழக்கொத்த *
மதுவிரிதுழாய்முடி மாதவன்தமர்க்கே ! (௪)

மாதவன்தமரென்று வாசலில்வானவர் *
போதுமினெமதிடம்புகுதுகவென்றலும் *
கீதங்கள்பாடினர் கின்னரர்கெருடர்கள் *
வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே ! (௫)

வேள்வியுள்மடுத்தலும் விரைகமழ்நறும்புகை *
காளங்கள்வலம்புரி கலந்தெங்குமிசைத்தனர் *
ஆண்மின்கள்வானக மாழியான்தமரென்று *
வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர்மகிழ்ந்தே ! (௬)

மடந்தையர்வாழ்த்தலும் மருதரும்வசுக்களும் *
தொடர்ந்தெங்கும் தோத்திரஞ்சொல்லினர் * தொடுகடல்

கிடந்தவெங்கேசவன் கிளரொளிமணிமுடிக் *
குடந்தையெங்கோவலன் குடியடியார்க்கே ! (எ)

குடியடியாரிவர் கோவிந்தன்றனக்கென்று *
முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ளக் *
கொடியணிநெடுமதிள் கோபுரங்குறுகினர் *
வடிவுடைமாதவன் வைகுந்தம்புகவே ! (அ)

வைகுந்தம்புகுதலும் வாசலில்வானவர் *
வைகுந்தன்தமரெம ரெமதிடம்புகுதென்று *
வைகுந்தத்தமரரும் முனிவரும்வியந்தனர் *
வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே ! (கூ)

விதிவகைபுகுந்தனரென்று நல்வேதியர் *
பதியினிற்பாங்கினில் பாதங்கள்கழுவினர் *
நிதியுநற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் *
மதிமுகமடந்தைய ரேந்தினர்வந்தே ! (க0)

ஃவந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து *
அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை *
கொந்தலர்பொழில் குருகூர்ச்சடகோபன் * சொல்
சந்தங்களாயிரத் திவைவல்லார்முனிவரே ! (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

---

ஈசுவரன் பெரியதிருவடிமேல் தோற்றி ப்ராக்ருதஸம்பந்தத்தை யொழித்து நித்யஸூரிகளிலேபுகுந்து விடாய்தீர்ந்து இவர்க்கு மவ்வருகான தன்விடாய்தீரும்படி ஸம்ஶ்லேஷித்தருளுதல்.

---

(கலித்துறை.)

ஃமுனியே! நான்முகனே! முக்கண்ணப்பா! * என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே! யென்கள்வா ! *
தனியேனாருயிரே! யென்தலைமிசையாய் வந்திட்டு *
இனிநான்போகலொட்டேனென்றும்மாயம்செய்யேலென்னையே!()

மாயம்செய்யேலென்னை யுன்திருமார்வத்துமாலைநங்கை *
வாசஞ்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணைகண்டாய்! *
நேசஞ்செய்துன்னோடென்னை யுயிர்வேறின்றியொன்றாகவே *
கூசஞ்செய்யாதுகொண்டா யென்னைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ

கூவிக்கொள்ளாய்வந்தந்தோ! என்பொல்லாக்கருமாணிக்கமே! *
ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்நான் *
மேவித்தொழும்பிரமன்சிவ னிந்திரனாதிக்கெல்லாம் *
நாவிக்கமலமுதற்கிழங்கே உம்பரந்ததுவே. (ங)

உம்பரந்தண்பாழேயோ! அதனுள்மிசைநீயேயோ! *
அம்பரநற்சோதி யதனுள்பிரமனரன்நீ! *
உம்பரும்யாதவரும்படைத்த முனிவனவன்நீ! *
எம்பரம்சாதிக்கலுற் றென்னைப்போரவிட்டிட்டாயே! (ச)

போரவிட்டிட்டென்னை நீபுறம்போக்கலுற்றால் * பின்னையான்
ஆரைக்கொண்டெத்தையந்தோ! எனதென்பதென்யானென்பதென்?
தீரவிரும்புண்டநீரதுபோல என்னாருயிரை
ஆரப்பருக * எனக்காராவமுதானாயே! (ரு)

எனக்காராவமுதா யெனதாவியையின்னுயிரை *
மனக்காராமைமன்னியுண்டிட்டா யினியுண்டொழியாய்! *
புனக்காயாநிறத்த புண்டரீகக்கட்செங்கனிவாய் *
உனக்கேற்கும்கோலமலர்ப்பாவைக் கன்பா! என்னன்பேயோ! (சா)

கோலமலர்ப்பாவைக்கன்பாகிய வென்னன்பேயோ! *
நீலவரையிரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்பக் *
கோலவராகமொன்றாய் நிலம்கோட்டிடைக்கொண்டவெந்தாய்! *
நீலக்கடல்கடைந்தாய்! உன்னைப்பெற்றினிப்போக்குவனோ? (எ)

பெற்றினிப்போக்குவனோ? உன்னையென்தனிப்பேருயிரை *
உற்றவிருவினையா யுயிராய்ப்பயனாயவையாய் *
முற்றவிம்மூவுலகும் பெருந்தூறாய்த்தூற்றிற்புக்கு *
முற்றக்கரந்தொளித்தாய்! என்முதல்தனிவித்தேயோ. (அ)

முதல்தனிவித்தேயோ? முழுமூவுலகாதிக்கெல்லாம் *
முதல்தனியுன்னையுன்னை யெனைநாள்வந்து கூடுவன்நான் ? *
முதல்தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய் *
முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிலீயோ (கூ)

சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ *
சூழ்ந்ததனிற்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ *
சூழ்ந்ததனிற்பெரிய சுடர்ஞானவின்பமேயோ *
சூழ்ந்ததனிற்பெரிய வென்னவாவறச்சூழ்ந்தாயே (க0)

அவாவறச்சூழ் அரியையயனையரனையலற்றி *
அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன *
அவாவிலந்தாதிகளா லிவையாயிரமும் * முடிந்த
அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே (கக)

கோயில் திருவாய்மொழி முற்றிற்று.



திருவரங்கத்தமுதனார்.



திருவரங்கத்தமுதனாருளிச்செய்த

# இராமாநுச நூற்றந்தாதி.

## தனியன்கள்.

(வேதப்பிரான்பட்டர் அருளிச்செய்தவை.)

(நேரிசைவெண்பா.)

முன்னை வினையகலமூங்கிற்குடியமுதன் *
பொன்னங்கழற்கமலப்போதிரண்டும் * என்னுடைய
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன் * தென்புலத்தார்க்
கென்னுக்கடவுடையேன் யான்?

(கலித்துறை.)

நயந்தருபேரின்பமெல்லாம் பழுதின்றிநண்ணினர்பால் *
சயந்தருகீர்த்தியிராமாநுசமுனிதாளிணைமேல் *
உயர்ந்தகுணத்துத்திருவரங்கத்தமுதோங்குமன்பால்
இயம்பும் * கலித்துறையந்தாதியோத விசைநெஞ்சமே

இனியென்குறைநமக்கெம்பெருமானார் திருநாமத்தினால் *
முனிதந்த "நூற்றெட்டுச்சாவித்திரி" யென்னுநுண்பொருளைக் *
கனிதந்தசெஞ்சொல்கலித்துறையந்தாதிபாடித்தந்தான் *
புனிதன்திருவரங்கத்தமுதாகிய புண்ணியனே

(அமுதனாருளிச்செய்ததாதல், அவரபிப்ராயத்தாலே
அபிநிவேசமுடைய ஆஸ்திகரருளிச்செய்ததாதல்.)

சொல்லின்தொகைகொண்டுனதடிப்போதுக்குத்தொண்டுசெய்யும் *
நல்லன்பரேத்துமுன்நாமமெல்லாமென்றன் நாவினுள்ளே *
அல்லும்பகலுமமரும்படிநல்கு * அறுசமய
வெல்லும்பரம இராமாநுச இதென்விண்ணப்பமே

———:():———

ஸ்ரீ: பூமன்னுமாது பொருந்தியமார்பன் * புகழ்மலிந்த
பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன் * பல்கலையோர்
தாம்மன்னவந்தவிராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ * நெஞ்சே சொல்லுவோமவன்நாமங்களே (க)

ஸ்ரீ: கள்ளார்பொழில்தென்னரங்கன் * கமலப்பதங்கள் நெஞ்சில்
கொள்ளாமனிசரைநீங்கிக் * குறையல்பிரானடிக்கீழ்
விள்ளாதவன்பனிராமாநுசன்மிக்கசீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு * ஒன்றறியேனெனக்குற்றபேரியல்வே. (உ.)

பேரியல்நெஞ்சே! அடிபணிந்தேனுன்னைப் * பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ளசுற்றம்புலர்த்திப் * பொருவருஞ்சீர்
ஆரியன்செம்மையிராமாநுசமுனிக்கன்புசெய்யும்
சீரியபேறுடையார் * அடிக்கீழென்னைச்சேர்த்ததற்கே! (௩)

என்னைப்புவியிலொருபொருளாக்கி * மருள்சுரந்த
முன்னைப்பழவினைவேரறுத்து * ஊழிமுதல்வனையே
பன்னப்பணித்த விராமாநுசன்பரன்பாதமுமென்
சென்னித்தரிக்கவைத்தான் * எனக்கேதுஞ்சிதைவில்லையே! (௪)

எனக்குற்றசெல்வமிராமாநுசனென்று இசையகில்லா
மனக்குற்றமாந்தர்பழிக்கில்புகழ் * அவன்மன்னியசீர்
தனக்குற்றவன்பரவன்திருநாமங்கள்சாற்றுமென்பா
வினக்குற்றம்காண்கில்லார் * பத்தியேய்ந்தவியல்விதென்றே. (௫)

இயலும்பொருளுமிசையத்தொடுத்து * ஈன்கவிகளன்பால்
மயல்கொண்டுவாழ்த்துமிராமாநுசனை * மதியின்மையால்
பயிலுங்கவிகளில்பத்தியில்லாத என்பாவிநெஞ்சால்
முயல்கின்றனன் * அவன்றன்பெருங்கீர்த்திமொழிந்திடவே! (௬)

ஸ்ரீமொழியைக்கடக்கும் பெரும்புகழான் * வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நம்கூரத்தாழ்வான் சரண்கூடியபின் *
பழியைக்கடத்து மிராமாநுசன்புகழ்பாடியல்லா
வழியைக்கடத்தல் * எனக்கினியாதும் வருத்தமன்றே? (௭)

வருத்தும்புறவிருள்மாற்ற * எம்பொய்கைப்பிரான்மறையின்
குருத்தின்பொருளையும் செந்தமிழ்தன்னையுங்கூட்டி * ஒன்றத்
திரித்தன்றெரித்த திருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
இருத்தும்பரமன் * இராமாநுசனெம்மிறையவனே! (௮)

இறைவனைக்காணு மிதயத்திருள்கெட * ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றியபூதத்திருவடிதாள்கள் * நெஞ்சத்
துறையவைத்தாளுமிராமாநுசன்புகழோதும்நல்லோர்
மறையினைக்காத்து * இந்தமண்ணகத்தே மன்னவைப்பவரே! (௯)

மன்னியபேரிருள்மாண்டபின் * கோவலுள்மாமலராள்
தன்னொடுமாயனைக்கண்டமைகாட்டும் * தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்றுமிராமாநுசற்கன்புபூண்டவர்தாள்
சென்னியிற்சூடும் * திருவுடையாரென்றும் சீரியரே! (௧௦)

சீரியநான்மறைச்செம்பொருள் * செந்தமிழாலளித்த
பாரியலும்புகழ்ப்பாண்பெருமாள் * சரணாம்பதுமத்
தாரியல்சென்னி யிராமாநுசன்றன்னைச்சார்ந்தவர்தம்
காரியவண்ணம் * என்னால்சொல்லொணாதிக்கடலிடத்தே! (கக)

இடங்கொண்டகீர்த்தி மழிசைக்கிறைவன் * இணையடிப்போ
தடங்குமிதயத் திராமாநுசன் * அம்பொற்பாதமென்றும்
கடங்கொண்டிறைஞ்சும் திருமுனிவர்க்கன்றிக்காதல்செய்யாத்
திடங்கொண்டஞானியர்க்கே * அடியேனன்புசெய்வதுவே! (கஉ)

செய்யும்பசுந்துளவத்தொழில் மாலையும் * செந்தமிழில்
பெய்யும்மறைத்தமிழ்மாலையும் பேராதசீரரங்கத்
தய்யன்கழற்கணியும் பரன்தாளன்றியாதரியா
மெய்யன் * இராமாநுசன்சரணேகதிவேறெனக்கே! (கங)

கதிக்குப்பதறி * வெங்கானமும்கல்லும் கடலுமெல்லாம்
கொதிக்கத்தவஞ்செய்யும் கொள்கையற்றேன் * கொல்லிகாவலன்சொல்
பதிக்கும்கலைக்கவிபாடும் பெரியவர்பாதங்களே
துதிக்கும்பரமன் * இராமாநுசனென்னைச் சோர்விலனே! (கச)

சோராதகாதல்பெருஞ்சுழிப்பால் * தொல்லைமாலையொன்றும்
பாராதவனைப்பல்லாண்டென்றுகாப்பிடும் * பான்மையன்தாள்
பேராதவுள்ளத் திராமாநுசன்றன் பிறங்கியசீர்
சாராமனிசரைச்சேரேன் * எனக்கென்னதாழ்வினியே? (கரு)

தாழ்வொன்றில்லாமறைதாழ்ந்து * தலமுழுதும்கலியே
ஆள்கின்றநாள்வந் தளித்தவன்காண்மின் அரங்கர்மௌலி
சூழ்கின்றமாலையைச் சூடிக்கொடுத்தவள்தொல்லருளால்
வாழ்கின்றவள்ளல் * இராமாநுசனென்னுமாமுனியே! (கசு)

முனியார்துயரங்கள் முந்திலும் * இன்பங்கள்மொய்த்திடினும்
கனியார்மனம் கண்ணமங்கைநின்றானை * கலைபரவும்
தனியானையைத் தண்டமிழ்செய்த நீலன்றனக்குலகில்
இனியானை * எங்களிராமாநுசனை வந்தெய்தினரே! (கஎ)

எய்தற்கரியமறைகளை * ஆயிரமின்தமிழால்
செய்தற்குலகில்வரும் சடகோபனைச்சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும் பெரியவர்சீரையுயிர்களெல்லாம்
உய்தற்குதவும் * இராமநுசனெம்முறுதுணையே! (கஅ

உறுபெருஞ்செல்வமும் தந்தையும்தாயும் * உயர்குருவும்
வெறிதருபூமகள்நாதனும் * மாறன்விளங்கியசீர்
நெறிதருஞ்செந்தமிழாரணமேயென்றிந் நீணிலத்தோர்
அறிதரநின்ற * இராமாநுசனெனக்காரமுதே! (௧௯)

ஆரப்பொழில்தென்குருகைப்பிரான் * அமுதத்திருவாய்
ஈரத்தமிழினிசையுணர்ந்தோர்கட்கு * இனியவர்தம்
சீரைப்பயின்றுய்யும் சீலங்கொள்நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும் * இராமாநுசனென்றன்மாநிதியே. (௨0)

நிதியைப்பொழியும்முகி லென்று * நீசர்தம்வாசல்பற்றித்
துதிகற்றுலகில்துவள்கின்றிலேன் * இனித்தூநெறிசேர்
எதிகட்கிறைவன் யமுனைத்துறைவ னிணையடியாம்
கதிபெற்றுடைய * இராமாநுசனென்னைக்காத்தனனே! (௨௧)

கார்த்திகையானும் கரிமுகத்தானும் * கனலும்முக்கண்
மூர்த்தியும்மோடியும் வெப்பும்முதுகிட்டு * மூவுலகும்
பூத்தவனே! யென்றுபோற்றிட வாணன்பிழைபொறுத்த
தீர்த்தனையேத்தும் * இராமாநுசனென்றன் சேமவைப்பே! (௨௨)

வைப்பாயவான்பொருளென்று * நல்லன்பர்மனத்தகத்தே
எப்போதும் வைக்குமிராமாநுசனை * இருநிலத்தில்
ஒப்பாரிலாதவுறுவினையேன் வஞ்சநெஞ்சில்வைத்து
முப்போதும்வாழ்த்துவன்*என்னாமிதுவவன்மொய்புகழ்க்கே? (௨௩)

மொய்த்தவெந்தீவினையால்பல்லுடல்தொறும்மூத்து * அதனால்
எய்த்தொழிந்தேன் முனநாள்களெல்லாம் * இன்றுகண்டுயர்ந்தேன்
பொய்த்தவம்போற்றும்புலைச்சமயங்கள் நிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து * இராமாநுசனென்னும் கார்தன்னையே! ()

காரேய்கருணையிராமாநுச! * இக்கடலிடத்தில்
ஆரேயறிபவர் நின்னருளின்தன்மை? * அல்லலுக்கு
நேரேயுறைவிடம்நான்வந்து நீயென்னை யுய்த்தபின் உன்
சீரேயுயிர்க்குயிராய் * அடியேற்கின்று தித்திக்குமே! (௨௫)

திக்குற்றகீர்த்தியிராமாநுசனை * என்செய்வினையாம்
மெய்க்குற்றம்நீக்கி விளங்கியமேகத்தை * மேவும்நல்லோர்
எக்குற்றவாளரெதுபிறப்பேதியல்வாகநின்றோர்?
அக்குற்றமப்பிறப்பு * அவ்வியல்வே நம்மையாட்கொள்ளுமே! (௨௬)

கொள்ளக்குறைவற்றிலங்கிக் * கொழுந்துவிட்டோங்கியவுன்
வள்ளற்றனத்தினால் வல்வினையேன்மனம் நீபுகுந்தாய் *
வெள்ளைச்சுடர்விடுமுன் பெருமேன்மைக் கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும் * இராமாநுச! என்தனிநெஞ்சமே! (உஎ)

நெஞ்சில்கறைகொண்டகஞ்சனைக் காய்ந்தநிமலன் * நங்கள்
பஞ்சித்திருவடிப்பின்னைதன்காதலன் * பாதம்நண்ணா
வஞ்சர்க்கரியவிராமாநுசன் புகழன்றியென்வாய்
கொஞ்சிப்பரவகில்லாது * என்ன வாழ்வின்றுகூடியதே! (உஅ)

கூட்டும்விதியென்று கூடுங்கொலோ? * தென்குருகைப்பிரான்
பாட்டென்னும்வேதப் பசுந்தமிழ்தன்னைத் * தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்த விராமாநுசன்புகழ்மெய்யுணர்ந்தோர்
ஈட்டங்கள்தம்மை * என்னாட்டங்கள் கண்டின்பமெய்திடவே! ()

இன்பந்தருபெருவீடுவந்தெய்திலென்? * எண்ணிறந்த
துன்பந்தருநிரயம்பலசூழிலென்? *தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட்கிறையவன் மாயனெனமொழிந்த
அன்பனனகன் * இராமாநுசனென்னை யாண்டனனே! (௩௦)

ஆண்டுகள்நாள்திங்களாய் * நிகழ்காலமெல்லாம், மனமே!
ஈண்டுபல்யோனிகள்தோறுழல்வோம் * இன்றோரெண்ணின்றியே
காண்டருதோளண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப்
பூண்டவன்பாளன் * இராமாநுசனைப் பொருந்தினமே! (௩க)

பொருந்தியதேசும் பொறையும்திறலும் புகழும் * நல்ல
திருந்தியஞானமும் செல்வமும்சேரும் * செறுகலியால்
வருந்தியஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன் * எங்களிராமாநுசனை யடைபவர்க்கே! (௩உ)

அடையார்கமலத்தலர்மகள்கேள்வன் * கையாழியென்னும்
படையோடுநாந்தகமும் படர்தண்டும் * ஒண்சார்ங்கவில்லும்
புடையார்புரிசங்கமுமிந்தப் பூதலம்காப்பதற்கென்று *
இடையேயிராமாநுசமுனியாயினவிந்நிலத்தே! (௩௩)

நிலத்தைச்செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பலத்தைச்செறித்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினை தென்
புலத்தில்பொறித்த வப்புத்தகச் சும்மைபொறுக்கியபின்
நலத்தைப்பொறுத்தது * இராமாநுசன்றன்நயப்புகழே! (௩ச)

நயவேனொருதெய்வம் நானிலத்தே * சிலமானிடத்தைப்
புயலேயெனக்கவிபோற்றிசெய்யேன் * பொன்னரங்கமென்னில்
மயலேபெருகுமிராமாநுசன் மன்னுமாமலர்த்தாள்
அயரேன் * அருவினையென்னையெவ்வாறின் றடர்ப்பதுவே? (௩௫)

அடல்கொண்டநேமியனாருயிர்நாதன் * அன்றாரணச்சொல்
கடல்கொண்டவொண்பொருள்கண்டளிப்பப்பின்னுங்காசினியோர்
இடரின்கண்வீழ்ந்திடத்தானுமவ்வொண்பொருள்கொண்டவர்பின்
படரும்குணன் * எம்மிராமாநுசன்றன்படியிதுவே! (௩௬)

படிகொண்டகீர்த்தி யிராமாயணமென்னும் பத்திவெள்ளம் *
குடிகொண்டகோயிலிராமாநுசன் குணங்கூறும் * அன்பர்
கடிகொண்டமாமலர்த்தாள் கலந்துள்ளங்கனியுநல்லோர்
அடிகண்டுகொண்டுகந்து * என்னையுமாளவர்க்காக்கினரே! (௩௭)

ஆக்கியடிமைநிலைப்பித்தனையென்னையின்று ! * அவமே
போக்கிப்புறத்திட்டதென்பொருளாமுன்பு ! * புண்ணியர்தம்
வாக்கிற்பிரியாவிராமாநுச! நின்னருளின்வண்ணம்
நோக்கில்தெரிவரிதால் * உரையாயிந்தநுண்பொருளே! (௩௮)

பொருளும்புதல்வரும்பூமியும் * பூங்குழலாருமென்றே
மருள்கொண்டிளைக்கும் நமக்குநெஞ்சே ! * மற்றுளார்தரமோ?
இருள்கொண்டவெந்துயர்மாற்றித் தன்னீறில்பெரும்புகழே
தெருளும்தெருள்தந்து * இராமநுசன்செய்யும்சேமங்களே! (௩௯)

சேமநல்வீடும்பொருளும்தருமமும் * சீரியநற்
காமமுமென்றிவைநான்கென்பர் * நான்கினுங்கண்ணனுக்கே
ஆமதுகாமமறம்பொருள் வீடிதற்கென்றுரைத்தான்
வாமனன்சீலன் * இராமாநுசனிந்தமண்மிசையே. (௪0)

மண்மிசையோனிகள்தோறும்பிறந்து * எங்கள்மாதவனே
கண்ணுறநிற்கிலுங்காணகில்லா * உலகோர்களெல்லாம்
அண்ணலிராமாநுசன்வந்துதோன்றியவப்பொழுதே
நண்ணருஞானம்தலைக்கொண்டு * நாரணற்காயினரே! (௪௧)

ஆயிழையார்கொங்கைதங்கும் * அக்காதலளற்றழுந்தி
மாயுமென்னாவியைவந்தெடுத்தானின்று * மாமலராள்
நாயகனெல்லாவுயிர்கட்குநாதனரங்கனென்னும்
தூயவன் * தீதிலிராமாநுசன் தொல்லருள்சுரந்தே! (௪௨)

சுரக்குந்திருவுமுணர்வும் * சொலப்புகில் வாயமுதம்
பரக்குமிருவினைபற்றறவோடும் * படியிலுள்ளீர்!
உரைக்கின்றனனுமக்கியானறஞ் சீறுமுறுகலியைத்
துரக்கும்பெருமை * இராமாநுசனென்றுசொல்லுமினே! (௪௩)

சொல்லார்தமிழொருமூன்றும் * சுருதிகள்நான்குமெல்லை
இல்லாவறநெறியாவும் தெரிந்தவன் * எண்ணருஞ்சீர்
நல்லார்பரவுமிராமாநுசன் திருநாமம்நம்பிக்
கல்லாரகலிடத்தோர் * எதுபேறென்றுகாமிப்பரே! (௪௪)

பேறொன்றுமற்றில்லைநின்சரணன்றி * அப்பேறளித்தற்
காறொன்றுமில்லைமற்றச்சரணன்றி * என்றிப்பொருளைத்
தேறுமவர்க்குமெனக்குமுனைத்தந்தசெம்மைசொல்லால்
கூறும்பரமன்று * இராமாநுச! மெய்ம்மைகூறிடிலே! (௪௫)

கூறும்சமயங்களாறுங்குலையக் * குவலயத்தே
மாறன்பணித்தமறையுணர்ந்தோனை * மதியிலியேன்
தேறும்படியென்மனம்புகுந்தானைத் திசையனைத்தும்
ஏறுங்குணனை * இராமாநுசனையிறைஞ்சினமே! (௪௬)

இறைஞ்சப்படும்பரனீசனரங்க னென்று * இவ்வுலகத்
தறம்செப்புமண்ணலிராமாநுசன் * என்னருவினையின்
திறம்செற்றிரவும்பகலும் விடாதென்றன்சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தான் * எனக்காருநிகரில்லையே! (௪௭)

நிகரின்றிநின்றவென்னீசதைக்கு * உன்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லை அருட்குமஃதேபுகல் * புன்மையிலோர்
பகரும்பெருமையிராமாநுச! இனிநாம்பழுதே
அகலும்பொருளென் * பயனிருவோமுக்குமானபின்னே. (௪௮)

ஆனதுசெம்மையறநெறிபொய்ம்மை * அறுசமயம்
போனதுபொன்றி யிறந்ததுவெங்கலி * பூங்கமலத்
தேனதிபாய்வயல் தென்னரங்கன்கழல் சென்னிவைத்துத்
தானதில்மன்னும் * இராமாநுசனித்தலத்துதித்தே! (௪௯)

உதிப்பனவுத்தமர்சிந்தையுள் * ஒன்னலர்நெஞ்சமஞ்சிக்
கொதித்திடமாறிநடப்பன * கொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தவென்புன்கவிப்பாவினம் பூண்டனபாவுதொல்சீர்
எதித்தலைநாதன் * இராமாநுசன்றனிணையடியே! (௫௰)

அடியைத்தொடர்ந்தெழுமைவர்கட்காய் * அன்றுபாரதப்போர்
முடியப்பரிநெடுந்தேர் விடுங்கோனை * முழுதுணர்ந்த
அடியர்க்கமுதமிராமாநுசனென்னை யாளவந்திப்
படியிற்பிறந்தது * மற்றில்லைகாரணம்பார்த்திடிலே! (௫௧)

பார்த்தானறுசமயங்கள்பதைப்ப * இப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டு புன்மையினேனிடைத்தான்புகுந்து *
தீர்த்தானிருவினைதீர்த் தரங்கன்செய்யதாளிணையோ
டார்த்தான் * இவையெம்மிராமாநுசன்செய்யுமற்புதமே! (௫௨)

அற்புதன்செம்மையிராமாநுசன் * என்னையாளவந்த
கற்பகம்கற்றவர்காமுறுசீலன் கருதரிய
பற்பல்லுயிர்களும் பல்லுலகியாவும் பரனதென்னும்
நற்பொருள்தன்னை * இந்நானிலத்தேவந்து நாட்டினனே! (௫௩)

நாட்டியநீசச்சமயங்கள்மாண்டன * நாரணனைக்
காட்டியவேதம்களிப்புற்றது * தென்குருகைவள்ளல்
வாட்டமிலாவண்டமிழ்மறைவாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து * இராமாநுசன்றன்னியல்வுகண்டே. (௫௪)

கண்டவர்சிந்தைகவரும் * கடிபொழில்தென்னரங்கன்
தொண்டர்குலாவுமிராமாநுசனைத் * தொகையிறந்த
பண்டருவேதங்கள் பார்மேல்நிலவிடப்பார்த்தருளும்
கொண்டலைமேவித்தொழும் * குடியாமெங்கள்கோக்குடியே! (௫௫)

கோக்குலமன்னரை மூவெழுகால் * ஒருகூர்மழுவால்
போக்கியதேவனைப்போற்றும்புனிதன் * புவனமெங்கும்
ஆக்கியகீர்த்தியிராமாநுசனையடைந்தபின்னென்
வாக்குரையாது * என்மனம்நினையாதினிமற்றொன்றையே! (௫௬)

மற்றொருபேறுமதியாது * அரங்கன்மலரடிக்கா
ளுற்றவரே தனக்குற்றவராய்க் கொள்ளுமுத்தமனை *
நற்றவர்போற்றுமிராமாநுசனை யிந்நாநிலத்தே
பெற்றனன் * பெற்றபின் மற்றறியேனொருபேதைமையே. (௫௭)

பேதையர்வேதப்பொருளிதென்றுன்னிப் * பிரமம்நன்றென்
றோதிமற்றெல்லாவுயிருமஃதென்று * உயிர்கள்மெய்விட்
டாதிப்பரனொடொன்றாமென்று சொல்லுமவ்வல்லலெல்லாம்
வாதில்வென்றான் * எம்மிராமாநுசன்மெய்ம்மதிக்கடலே. (௫௮)

கடலளவாய திசையெட்டினுள்ளும் * கலியிருளே
மிடைதருகாலத்திராமாநுசன் * மிக்கநான்மறையின்
சுடரொளியாலவ்விருளைத்துரந்திலனேலுயிரை
யுடையவன் நாரணனென்றறிவாரில்லை யுற்றுணர்ந்தே. (௫௯)

உணர்ந்தமெய்ஞ்ஞானியர்யோகந்தொறும் * திருவாய்மொழியின்
மணந்தருமின்னிசைமன்னுமிடந்தொறும் * மாமலராள்
புணர்ந்தபொன்மார்பன் பொருந்தும்பதிதொறும்புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டல் * இராமாநுசனெங்குலக்கொழுந்தே. (௬0)

கொழுந்துவிட்டோடிப்படரும்வெங்கோல்வினையால் * நிரயத்
தழுந்தியிட்டேனைவந்தாட்கொண்டபின்னும் * அருமுனிவர்
தொழுந்தவத்தோனெம்மிராமாநுசன்தொல்புகழ்ச்சுடர்மிக்
கெழுந்தது * அத்தால்நல்லதிசயங்கண்டதிருநிலமே. (௬௧)

இருந்தேனிருவினைப்பாசம்கழற்றி * இன்றியானிறையும்
வருந்தேனினியெம்மிராமாநுசன் * மன்னுமாமலர்த்தாள்
பொருந்தாநிலையுடைப்புன்மையினோர்க்கொன்றும்நன்மைசெய்யாப்
பெருந்தேவரைப்பரவும் * பெரியோர்தம்கழல்பிடித்தே. (௬௨)

பிடியைத்தொடரும் களிறென்ன * யானுன்பிறங்கியசீர்
அடியைத்தொடரும்படி நல்கவேண்டும் * அறுசமயச்
செடியைத்தொடரும்மருள்செறிந்தோர்சிதைந்தோடவந்திப்
படியைத்தொடரும் * இராமாநுசா மிக்கபண்டிதனே! (௬௩)

பண்டருமாறன்பசுந்தமிழ் * ஆனந்தம்பாய்மதமாய்
விண்டிடஎங்களிராமாநுசமுனிவேழம் * மெய்ம்மை
கொண்டநல்வேதக்கொழுந்தண்டமேந்திக்குவலயத்தே
மண்டிவந்தேன்றது * வாதியர்காளுங்கள் வாழ்வற்றதே. (௬௪)

வாழ்வற்றதுதொல்லைவாதியர்க்கு * என்றும்மறையவர்தம்
தாழ்வற்றது தவம்தாரணிபெற்றது * தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்த குணத்தினர்க்கந்
நாழற்றது * நம்மிராமாநுசன் தந்தஞானத்திலே. (௬௫)

ஞானம்கனிந்தநலங்கொண்டு * நாடொறும்நைபவர்க்கு
வானம்கொடுப்பதுமாதவன் * வல்வினையேன்மனத்தில்
ஈனம்கடிந்தவிராமாநுசன் தன்னையெய்தினர்க்கத்
தானம்கொடுப்பது * தன்தகவென்னும் சரண்கொடுத்தே. (௬௬)

சரணமடைந்த தருமனுக்காப் * பண்டு நூற்றுவரை
மரணமடைவித்த மாயவன் * தன்னை வணங்கவைத்த
கரணமிவையுமக்கன்றென்றிராமாநுசனுயிர்கட்
கரணங்கமைத்திலனேல் * அரணார்மற்றிவ்வாருயிர்க்கே. (௬௭)

ஆரெனக்கின்று நிகர்சொல்லில் * மாயனன்றைவர்தெய்வத்
தேரினிற்செப்பியகீதையின் செம்மைப் * பொருள்தெரியப்
பாரினிற்சொன்னவிராமாநுசனைப் பணியுநல்லோர்
சீரினிற்சென்றுபணிந்தது * என்னாவியுஞ்சிந்தையுமே. (௬௮)

சிந்தையினோடு கரணங்கள் யாவுஞ்சிதைந்து * முன்னாள்
அந்தமுற்றாழ்ந்தது கண்டு * அவையென்றனக்கன்றருளால்
தந்தவரங்கனுந் தன்சரண்தந்திலன் தானதுதந்து *
எந்தையிராமாநுசன்வந்தெடுத்தனனின்றென்னையே. (௬௯)

என்னையும்பார்த்தென்னியல்வையும்பார்த்து * எண்ணில்பல்குணத்த
உன்னையும்பார்க்கில் அருள்செய்வதேநலம் * அன்றியென்பால்
பின்னையும்பார்க்கில் நலமுளதேயுன்பெருங்கருணை
தன்னையென்பார்ப்பர் * இராமாநுசாவுன்னைச்சார்ந்தவரே. (௭0)

சார்ந்ததென்சிந்தையுன் தாளிணைக்கீழ் * அன்புதான்மிகவும்
கூர்ந்ததத்தாமரைத்தாள்களுக்கு * உன்றன்குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கை முன்செய்வினை நீசெய்வினையதனால்
பேர்ந்தது * வண்மையிராமாநுசா வெம்பெருந்தகையே. (௭௧)

கைத்தனன்தீயசமயக்கலகரை * காசினிக்கே
உய்த்தனன்தூயமறைநெறிதன்னை * என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போடிருந்தேத்தும் நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை * இராமாநுசன்மிக்கவண்மைசெய்தே. (௭௨)

வண்மையினாலுந் தன்மாதகவாலும் * மதிபுரையும்
தண்மையினாலுமித்தாரணியோர்கட்கு * தான்சரணாய்
உண்மைநன்ஞானமுரைத்தவிராமாநுசனையுன்னும்
திண்மையல்லாலெனக்கில்லை * மற்றோர்நிலைதேர்ந்திடிலே. (௭௩)

தேரார்மறையின்திறமென்று * மாயவன்தீயவரைக்
கூராழிகொண்டுகுறைப்பது * கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம்பிராமாநுசனவ்வெழில்மறையில்
சேராதவரைச்சிதைப்பது * அப்போதொருசிந்தைசெய்தே. (௭௪)

செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும் * திருவரங்கர்
கைத்தலத்தாழியும்சங்கமுமேந்தி * நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துன்னை விடேனென்றிருக்கிலும்நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து * இராமாநுசவென்னைமுற்றும்நின்றே. (எரு)

நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும் * நிறைவேங்கடப்பொற்
குன்றமும்வைகுந்தநாடும் குலவியபாற்கடலும் *
உன்றனக்கெத்தனையின்பந்தருமுன்னிணைமலர்த்தாள்
என்றனக்குமது * இராமாநுசவிவையீந்தருளே. (எசு)

ஈந்தனனீயாதவின்னருள் * எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனனம்மறைப்பல்பொருளால் * இப்படியனைத்தும்
ஏய்ந்தனன்கீர்த்தியினா லென்வினைகளைவேர்பறியக்
காய்ந்தனன் * வண்மையிராமாநுசற்கென்கருத்தினியே?. (எஎ)

கருத்திற்புகுந் துள்ளில்கள்ளங்கழற்றி * கருதரிய
வருத்தத்தினால்மிகவஞ்சித்து * நீயிந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள்கேள்வனுக்காக்கியபின் னென்னெஞ்சிற்
பொருத்தப்படாது * எம்மிராமாநுசமற்றோர் பொய்ப்பொருளே. ()

பொய்யைச்சுரக்கும் பொருளைத்துறந்து * இந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்கு மிராமாநுசன்நிற்க * வேறுநம்மை
உய்யக்கொளவல்ல தெய்வமிங்கியாதென்றுலர்ந்தவமே
ஐயப்படாநிற்பர் * வையத்துள்ளோர்நல்லறிவிழந்தே. (எகூ)

நல்லார்பரவுமிராமாநுசன் * திருநாமம்நம்ப
வல்லார்திறத்தைமறவாதவர்களெவர் * அவர்க்கே
எல்லாவிடத்திலுமென்றுமெப்போதிலு மெத்தொழும்பும் *
சொல்லால்மனத்தால்கருமத்தினால் செய்வன்சோர்வின்றியே. (அ0)

சோர்வின்றியுன்றன் துணையடிக்கீழ் * தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்றவெனக்கு * அரங்கன்செய்யதாளிணைகள்
பேர்வின்றியின்று பெறுத்துமிராமாநுசவினியுன்
சீரொன்றியகருணைக்கு * இல்லைமாறு தெரிவுறிலே. (அக)

தெரிவுற்றஞானஞ்செறியப்பெறாது * வெந்தீவினையால்
உருவற்ற ஞானத்துழல்கின்றவென்னை * ஒருபொழுதில்
பொருவற்றகேள்வியனாக்கிநின்றா னென்னபுண்ணியனோ
தெரிவுற்றகீர்த்தி * இராமாநுசனென்னும் சீர்முகிலே. (அஉ

சீர்கொண்டுபேரறம் செய்து * நல்வீடுசெறிதுமென்னும்
பார்கொண்டமேன்மையர் கூட்டனல்லேன் * உன்பதயுகமாம்
ஏர்கொண்டவீட்டை யெளிதினிலெய்துவனுன்னுடைய
கார்கொண்டவண்மை * இராமாநுசாஇதுகண்டுகொள்ளே. (௮௩)

கண்டுகொண்டேனெம்மிராமாநுசன்றன்னை * காண்டலுமே
தொண்டுகொண்டேனவன்தொண்டர்பொற்றாளில்*என்தொல்லைவெ
விண்டுகொண்டேனவன்சீர்வெள்ளவாரியைவாய்மடுத்தின்று[ந்நோய்
உண்டுகொண்டேன் * இன்னமுற்றனவோதிலுலப்பில்லையே. (௮௪)

ஓதியவேதத்தினுட்பொருளாய் * அதனுச்சிமிக்க
சோதியைநாதனெனவறியா துழல்கின்றதொண்டர் *
பேதைமைதீர்த்தவிராமாநுசனைத் தொழும்பெரியோர்
பாதமல்லாலென்றனாருயிர்க்கு*யாதொன்றும் பற்றில்லையே. (௮௫)

பற்றாமனிசரைப்பற்றி * அப்பற்றுவிடாதவரே
உற்றாரெனவுழன்றோடிநையேனினி * ஒள்ளியநூல்
கற்றார்பரவுமிராமாநுசனைக்கருதுமுள்ளம்
பெற்றாரெவர் * அவரெம்மைநின்றாளும்பெரியவரே. (௮௬)

பெரியவர்பேசிலும் பேதையர்பேசிலும் * தன்குணங்கட்
குரியசொல்லென்றுமுடையவனென்றென்று* உணர்வில்மிக்கோர்
தெரியும்வண்கீர்த்தி யிராமாநுசன்மறைதேர்ந்துலகில்
புரியுநன்ஞானம் * பொருந்தாதவரைப்பொரும் கலியே. (௮௭)

கலிமிக்கசெந்நெல்கழனிக்குறையல் * கலைப்பெருமான்
ஒலிமிக்கபாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து * அதனால்
வலிமிக்கசீயமிராமாநுசன்மறைவாதியராம்
புலிமிக்கதென்று * இப்புவனத்தில்வந்தமைபோற்றுவனே. (௮௮)

போற்றரும் சீலத்திராமாநுச * நின்புகழ்தெரிந்து
சாற்றுவனேலதுதாழ்வது தீரில் * உன்சீர்தனக்கோர்
ஏற்றமென்றேகொண்டிருக்கிலுமென்மனமேத்தியன்றி
ஆற்றகில்லாது * இதற்கென்னினைவாயென்றிட்டஞ்சுவனே. (௮௯)

நினையார்பிறவியைநீக்கும்பிரானை * இந்நீள்நிலத்தே
எனையாளவந்தவிராமாநுசனை * இருங்கவிகள்
புனையார் புனையும்பெரியவர்தாள்களில் பூந்தொடையல்
வனையார் * பிறப்பில் வருந்துவர்மாந்தர்மருள்சுரந்தே. (௯0)

மருள்சுரந்தாகமவாதியர்கூறும் அவப்பொருளாம்
இருள்சுரந்தெய்த்தவுலகிருள்நீங்க * தன்னீண்டியசீர்
அருள்சுரந்தெல்லாவுயிர்கட்கும் நாதனரங்கனென்னும்
பொருள்சுரந்தான் * எம்மிராமாநுசன்மிக்கபுண்ணியனே. (௯௧)

புண்ணியநோன்புபுரிந்துமிலேன் * அடிபோற்றிசெய்யும்
நுண்ணருங்கேள்விநுவன்றுமிலேன் * செம்மைநூற்புலவர்க்
கெண்ணருங்கீர்த்தி யிராமாநுச இன்று நீபுகுந்தென்
கண்ணுள்ளும்நெஞ்சுள்ளும் * நின்றவிக்காரணம் கட்டுரையே. (௯௨)

கட்டப்பொருளைமறைப்பொருளென்று * கயவர்சொல்லும்
பெட்டைக்கெடுக்கும் பிரானல்லனே * என்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னுமொள்வாளுருவி
வெட்டிக்களைந்த * இராமாநுசனென்னும் மெய்த்தவனே. (௯௩)

தவந்தரும்செல்வம்தகவுந்தரும் * சலியாப்பிறவிப்
பவந்தரும்தீவினைபாற்றித்தரும் * பரந்தாமமென்னும்
திவந்தரும் தீதிலிராமாநுசன் தன்னைச்சார்ந்தவர்கட்
குவந்தருந்தேன் * அவன்சீரன்றியானொன்றுமுள்மகிழ்ந்தே. (௯௪)

உண்ணின்றுயிர்களுக்குற்றனவேசெய்து * அவர்க்குயவே
பண்ணும்பரனும்பரிவிலனாம்படி * பல்லுயிர்க்கும்
விண்ணின்தலைநின்று வீடளிப்பா னெம்மிராமாநுசன்
மண்ணின்தலத்துதித்து * மறைநாலும் வளர்த்தனனே. (௯௫)

வளரும்பிணிகொண்ட வல்வினையால் * மிக்கநல்வினையில்
கிளரும்துணிவு கிடைத்தறியாது * முடைத்தலையூன்
தளருமளவும் தரித்தும்விழுந்தும் தனிதிரிவேற்
குளரெம்மிறைவர் * இராமாநுசன்றன்னையுற்றவரே. (௯௬)

தன்னையுற்றாட்செய்யும்தன்மையினோர் * மன்னுதாமரைத்தாள்
தன்னையுற்றாட்செய்யவென்னையுற்றானின்று * தன்தகவால்
தன்னையுற்றாரன்றித்தன்மையுற்றாரில்லையென்றறிந்து
தன்னையுற்றாரை * இராமாநுசன் குணம்சாற்றிடுமே. (௯௭)

இடுமேயினியசுவர்க்கத்தில் * இன்னம்நரகிலிட்டுச்
சுடுமேயவற்றைத் தொடர்தருதொல்லை * சுழல்பிறப்பில்
நடுமேயினிநம்மிராமாநுசன் நம்மைநம்வசத்தே
விடுமேசரணமென்றால் * மனமேநையல்மேவுதற்கே. (௯௮)

தற்கச்சமணரும் சாக்கியப்பேய்களும் * தாழ்சடையோன்
சொற்கற்றசோம்பரும் சூனியவாதரும் * நான்மறையும்
நிற்கக்குறும்புசெய்நீசரும்மாண்டனர் நீணிலத்தே
பொற்கற்பகம் * எம்மிராமாநுசமுனிபோந்தபின்னே. (௯௯)

போந்ததென்னெஞ்சென்னும்பொன்வண்டு உனதடிப்போதிலொண்
ராம்தெளிதேனுண்டமர்ந்திடவேண்டி * நின்பாலதுவே [சீ
ஈந்திடவேண்டுமிராமாநுச இதுவன்றியொன்றும்
மாந்தகில்லாது * இனிமற்றொன்றுகாட்டிமயக்கிடலே. (௧௦௦)

மயக்குமிருவினைவல்லியிற்பூண்டு * மதிமயங்கித்
துயக்கும்பிறவியில் தோன்றியவென்னை * துயரகற்றி
உயக்கொண்டுநல்குமிராமாநுசவென்றதுன்னையுன்னி
நயக்குமவர்க்கிதிழுக்கென்பர் * நல்லவரென்றுநைந்தே. (௧௦௧)

நையும்மனமுன்குணங்களையுன்னி * என்நாவிருந்தெம்
ஐயனிராமாநுசனென்றழைக்கும் * அருவினையேன்
கையும்தொழும் கண்கருதிடுங் காணக்கடல்புடைசூழ்
வையமிதனில் * உன்வண்மையென்பாலென்வளர்ந்ததுவே. (௧௦௨)

வளர்ந்தவெங்கோபமடங்கலொன்றாய் * அன்றுவாளவுணன்
கிளர்ந்தபொன்னாகம்கிழித்தவன் * கீர்த்திப்பயிரெழுந்து
விளைந்திடும்சிந்தையிராமாநுசனென்றன்மெய்வினைநோய்
களைந்துநன்ஞானமளித்தனன் * கையிற்கனியென்னவே. (௧௦௩)

கையிற்கனியென்ன கண்ணனைக்காட்டித்தரினும் * உன்றன்
மெய்யிற்பிறங்கிய சீரன்றிவேண்டிலன்யான் * நிரயத்
தொய்யில்கிடக்கினும் சோதிவிண்சேரினும் இவ்வருள்நீ
செய்யில்தரிப்பன் * இராமாநுசஎன்செழுங்கொண்டலே. (௧௦௪)

செழுந்திரைப்பாற்கடல் கண்டுயில்மாயன் * திருவடிக்கீழ்
விழுந்திருப்பார்நெஞ்சில் மேவுநன்ஞானி * நல்வேதியர்கள்
தொழுந்திருப்பாத னிராமாநுசனைத்தொழும்பெரியோர்
எழுந்திரைத்தாடுமிடம் * அடியேனுக்கிருப்பிடமே. (௧௦௫)

[சாற்றுப்பாட்டுகள்.]

இருப்பிடம்வைகுந்தம்வேங்கடம் * மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம்மாயனுக்கென்பர்நல்லோர் * அவைதன்னொடும்வந்
திருப்பிடம்மாயனிராமாநுசன் மனத்தின்றவன்வந்
திருப்பிடம் * என்றனிதயத்துள்ளேதனக்கின்புறவே. (௧௦௬)

ஸ்ரீ இன்புற்றசீலத்திராமாநுச * என்றுமெவ்விடத்தும்
என்புற்றநோயுடல்தோறும் பிறந்திறந்து * எண்ணரிய
துன்புற்றுவீயினும் சொல்லுவதொன்றுண்டுன்தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி * என்னையாக்கியங்காட்படுத்தே. (௧0எ)

ஸ்ரீ அங்கயல்பாய்வயல் தென்னரங்கன் * அணியாகமன்னும்
பங்கயமாமலர்ப்பாவையைப்போற்றுதும் * பத்தியெல்லாம்
தங்கியதென்னத் தழைத்துநெஞ்சே நம்தலைமிசையே
பொங்கியகீர்த்தி * இராமாநுசனடிப்பூமன்னவே. (௧0அ)

---

திருவரங்கத்தமுதனார் திருவடிகளேசரணம்.

இராமாநுசநூற்றந்தாதி சம்பூர்ணம்.

---

ஸ்ரீவரவரமுநயேநம:.

பெரியஜீயரருளிச்செய்த

# உ ப தே ச ர த் தி ன மா லை.

---

தனியன்கள்.

கோயிற்கந்தாடையண்ணனருளிச்செய்தது.

(கட்டளைக்கலித்துறை.)

முன்னந்திருவாய்மொழிப்பிள்ளைதாமுபதேசித்த * நேர்
தன்னின்படியைத் தணவாதசொல் மணவாளமுனி *
தன்னன்புடன்செய் யுபதேசரத்தினமாலைதன்னை *
தன்னெஞ்சு தன்னில் தரிப்பவர்தாள்கள் சரண்நமக்கே.

(நேரிசைவெண்பா.)

ஸ்ரீ எந்தைதிருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால் *
வந்தவுபதேசமார்க்கத்தைச்-சிந்தைசெய்து *
பின்னவரும்கற்க வுபதேசமாய்ப்பேசுகின்றேன் *
மன்னியசீர் வெண்பாவில் வைத்து. (௧)

கற்றோர்கள்தாமுகப்பர் கல்விதன்னிலாசையுள்ளோர்
பெற்றோமெனவுகந்துபின்புகற்பர் * மற்றோர்கள்
மாச்சரியத்தாலிகழில் வந்ததென்நெஞ்சே * இகழ்கை
ஆச்சரியமோதானவர்க்கு. (௨.)

ஸ்ரீ ஆழ்வார்கள்வாழி அருளிச்செயல்வாழி *
தாழ்வாதுமில் குரவர்தாம்வாழி * ஏழ்பாரும்
உய்யஅவர்களுரைத்தவைகள்தாம்வாழி *
செய்யமறைதன்னுடனே சேர்ந்து. (க)

பொய்கையார் பூதத்தார் பேயார் * புகழ்மழிசை
ஐயனருள்மாறன் சேரலர்கோன் * துய்யபட்ட
நாதனன்பர்தாள்தூளி நற்பாணன்நன்கலியன் *
ஈதிவர்தோற்றத்தடைவா மிங்கு. (உ)

அந்தமிழால்நற்கலைகளாய்ந்துரைத்த ஆழ்வார்கள் *
இந்தவுலகிலிருள்நீங்க * வந்துதித்த
மாதங்கள் நாள்கள் தம்மை மண்ணுலகோர்தாமறிய *
ஈதென்றுசொல்லுவோம் யாம்! (௩)

ஸ்ரீ ஐப்பசியிலோணமவிட்டம் சதயமிவை *
ஒப்பிலவாநாள்க ளுலகத்தீர் ! எப்புவியும்
பேசுபுகழ்ப்பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்
தேசுடனேதோன்றுசிறப்பால் ! (௪)

மற்றுளவாழ்வார்களுக்கு முன்னேவந்துதித்து *
நற்றமிழால்நூல்செய்துநாட்டையுய்த்த * பெற்றிமையோர்
என்றுமுதலாழ்வார்களென்னும் பெயரிவர்க்கு *
நின்றதுலகத்தேநிகழ்ந்து! (௫)

பேதைநெஞ்சே இன்றைப்பெருமையறிந்திலையோ?
ஏதுபெருமையின்றைக்கென்னென்னில் * ஓதுகின்றேன்
வாய்த்தபுகழ்மங்கையர்கோன் மாநிலத்தில்வந்துதித்த *
கார்த்திகையில் கார்த்திகைநாள்காண் ! (௬)

ஸ்ரீ மாறன்பணித்ததமிழ்மறைக்கு * மங்கையர்கோன்
ஆறங்கங்கூறவவதரித்த வீறுடைய
கார்த்திகையில் கார்த்திகைநாளின்றென்றுகாதலிப்பார் *
வாய்த்தமலர்த்தாள்கள் நெஞ்சே ! வாழ்த்து ! (௭)

கார்த்திகையில்ரோகிணிநாள் காண்மினின்றுகாசினியீர் !
வாய்த்தபுகழ்ப்பாணர்வந்துதிப்பால் * ஆத்தியர்கள்
அன்புடனேதான் "அமலனாதிபிரான்" கற்றதற்பின் *
நன்குடனேகொண்டாடுநாள் ! (௰)

மன்னியசீர்மார்கழியில்கேட்டையின்றுமாநிலத்தீர் !
"என்னிதனுக்கேற்ற" மெனிலுரைக்கேன் * துன்னுபுகழ்
மாமறையோன்தொண்டரடிப்பொடியாழ்வார்பிறப்பால் *
நான்மறையோர் கொண்டாடும் நாள் ! (கக)

தையில்மகமின்றுதாரணியீர் ! ஏற்றமிந்தத்
தையில்மகத்துக்குச்சாற்றுகின்றேன் * துய்யமதி
பெற்றமழிசைப்பிரான்பிறந்தநாளென்று *
நற்றவர்கள்கொண்டாடும்நாள் ! (கஉ)

மாசிப்புனர்பூசம் காண்மினின்று மண்ணுலகீர் !
தேசித்திவசத்துக்கே தென்னில் * பேசுகின்றேன்
கொல்லிநகர்க்கோன் குலசேகரன்பிறப்பால் *
நல்லவர்கள்கொண்டாடும் நாள். (கங)

ஸ்ரீ ஏரார்வைகாசி விசாகத்தினேற்றத்தை *
பாரோரறியப்பகர்கின்றேன் * சீராரும்
வேதந்தமிழ்செய்த மெய்யனெழில்குருகை *
நாதனவதரித்தநாள். (கச)

ஸ்ரீ உண்டோவைகாசிவிசாகத்துக்கொப்பொருநாள் ?*
உண்டோசடகோபர்க்கொப்பொருவர்? * உண்டோ
திருவாய்மொழிக்கொப்புத் தென்குருகைக்குண்டோ?*
ஒருபார்தனிலொக்குமூர். (க௫)

இன்றைப்பெருமையறிந்திலையோ? ஏழைநெஞ்சே!*
இன்றைக்கென்னேற்ற மெனிலுரைக்கேன் * நன்றிபுனை
பல்லாண்டுபாடிய நம்பட்டர்பிரான்வந்துதித்த *
நல்லானியிற்சோதிநாள். (கசு)

மாநிலத்தில்முன் நம்பெரியாழ்வார்வந்துதித்த *
ஆனிதன்னில்சோதியென்றாலாதரிக்கும் * ஞானியர்க்
கொப்போரிலை யிவ்வுலகுதனிலென்றுநெஞ்சே! *
எப்போதும்சிந்தித்திரு. (கஎ)

மங்களாசாசனத்தின் மற்றுள்ளவாழ்வார்கள் *
தங்களார்வத்தளவுதானன்றி * பொங்கும்
பரிவாலேவில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான்பெற்றான் *
பெரியாழ்வா ரென்னும் பெயர். (கஅ)

கோதிலவாமாழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம் *
ஆதி திருப்பல்லாண்டானதுவும் * வேதத்துக்
கோமென்னுமதுபோ லுள்ளதுக்கெல்லாம்சுருக்காய் *
தான்மங்கலமாதலால். (கசா)

உண்டோதிருப்பல்லாண்டுக் கொப்பதோர்கலைதான்?*
உண்டோபெரியாழ்வார்க்கொப்பொருவர்? * தண்டமிழ்நூல்
செய்தருளுமாழ்வார்கள் தம்மிலவர்செய்கலையில் *
பைதல்நெஞ்சே! நீயுணர்ந்துபார். (உ0)

ஆழ்வார்திருமகளாராண்டாள் * மதுரகவி
யாழ்வாரெதிராசராமிவர்கள் * வாழ்வாக
வந்துதித்த மாதங்கள்நாள்கள்தம்மின்வாசியையும் *
இந்தவுலகோர்க்குரைப்போம் யாம். (உக)

இன்றோ திருவாடிப்பூரம்?* எமக்காக
அன்றோஇங்காண்டாளவதரித்தாள் * குன்றாத
வாழ்வான வைகுந்தவான்போகந்தன்னையிகழ்ந்து *
ஆழ்வார்திருமகளாராய். (உஉ)

பெரியாழ்வார்பெண்பிள்ளையாய் * ஆண்டாள்பிறந்த
திருவாடிப்பூரத்தின் சீர்மை * ஒருநாளைக்
குண்டோ? மனமே! யுணர்ந்துபார் * ஆண்டாளுக்
குண்டாகி லொப்பிதுக்குமுண்டு. (உங)

அஞ்சுகுடிக்கொருசந்ததியாய் * ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய் * பிஞ்சாய்ப்
பழுத்தாளையாண்டாளைப் பத்தியுடன்நாளும் *
வழுத்தாய்மனமே! மகிழ்ந்து. (உச)

ஏரார்மதுரகவி யிவ்வுலகில்வந்துதித்த *
சீராரும்சித்திரையில் சித்திரைநாள் * பாருலகில்
மற்றுள்ளவாழ்வார்கள் வந்துதித்தநாள்களிலும் *
உற்றதெமக்கென்றுநெஞ்சே! யோர். (உரு)

வாய்த்ததிருமந்திரத்தின் மத்திமமாம்பதம்போல் *
சீர்த்தமதுரகவி செய்கலையை * ஆர்த்தபுகழ்
ஆரியர்கள்தாங்க ளருளிச்செயல்நடுவே *
சேர்வித்தார் தாற்பரியம்தேர்ந்து. (உசா)

ஸ்ரீ இன்றுலகீர்! சித்திரையி லேய்ந்ததிருவாதிரைநாள் *
என்றையினுமின்றிதனுக்கேற்றமென்றுள்! * என்றவர்க்குச்
சாற்றுகின்றேன்கேண்மி னெதிராசர்தம்பிறப்பால் *
நாற்றிசையுங்கொண்டாடும் நாள். (உஎ)

ஸ்ரீ ஆழ்வார்கள்தாங்க ளவதரித்தநாள்களிலும் *
வாழ்வானநாள்நமக்கு மண்ணுலகீர்! * ஏழ்பாரு
முய்ய வெதிராசருதித்தருளும் * சித்திரையில்
செய்யதிருவாதிரை. (உஅ)

ஸ்ரீ எந்தைஎதிராச ரிவ்வுலகிலெந்தமக்கா *
வந்துதித்தநாளென்னும் வாசியினுல் * இந்தத்
திருவாதிரைதன்னின் சீர்மைதனைநெஞ்சே *
ஒருவாம லெப்பொழுதுமோர். (உகூ)

எண்ணரும்சீர்ப்பொய்கைமுன்னோ ரிவ்வுலகில்தோன்றியவூர் *
வண்மைமிகுகச்சிமல்லைமாமயிலை * மண்ணியில்நீர்
தேங்கும்குறையலூர் சீர்க்கலியன்தோன்றியவூர் *
ஓங்குமுறையூர்பாணனூர். (௩0)

தொண்டரடிப்பொடியார் தோன்றியவூர் * தொல்புகழ்சேர்
மண்டங்குடியென்பர் மண்ணுலகில் * எண்டிசையும்
ஏத்தும் குலசேகரனூரெனவுரைப்பர் *
வாய்த்ததிருவஞ்சிக்களம். (௩க)

மன்னுதிருமழிசை மாடத்திருக்குருகூர் *
மின்னுபுகழ்வில்லிபுத்தூர் மேதினியில் * நன்னெறியோர்
ஏய்ந்தபத்திசாரரொழில்மாறன் பட்டர்பிரான் *
வாய்ந்துதித்தவூர்கள்வகை. (௩உ)

சீராரும்வில்லிபுத்தூர் செல்வத்திருக்கோளூர் *
ஏரார்பெரும்பூதூரென்னுமிவை * பாரில்
மதியாருமாண்டாள் மதுரகவியாழ்வார் *
எதிராசர்தோன்றியவூரிங்கு. (௩௩)

ஆழ்வார்களேற்ற மருளிச்செயலேற்றம் *
தாழ்வாதுமின்றி யவைதான்வளர்த்தோர் * ஏழ்பாரு
முய்ய வவர்கள்செய்தவியாக்கியைகளுள்ளதெல்லாம் *
வையமறியப்பகர்வோம் வாய்ந்து. (௩௪)

ஆழ்வார்களையு மருளிச்செயல்களையும் *
தாழ்வாநினைப்பவர்கள்தாம் * நரகில் - வீழ்வார்க
ளென்றுநினைந்துநெஞ்சே! யெப்பொழுதும்நீயவர்பால் *
சென்றணுகக்கூசித்திரி. (௩௫)

தெருளுற்றவாழ்வார்கள் சீர்மையறிவாரார்? *
அருளிச்செயலையறிவாரார்? * அருள்பெற்ற
நாதமுனிமுதலா நந்தேசிகரையல்லால் *
பேதைமனமே! யுண்டோ? பேசு. (௩௬)

ஓராண்வழியாயுபதேசித்தார் முன்னோர் *
ஏராரெதிராசரின்னருளால் * பாருலகில்
ஆசையுடையோர்க்கெல்லா மாரியர்காள்கூறுமென்று *
பேசிவரம்பறுத்தார் பின். (௩௭)

ஸ்ரீ எம்பெருமானார் தரிசனமென்றேயிதுக்கு *
நம்பெருமாள்பேரிட்டு நாட்டிவைத்தார் * அம்புவியோர்
இந்தத்தரிசனத்தை யெம்பெருமானார்வளர்த்த *
அந்தச்செயலறிகைக்கா. (௩௮)

பிள்ளான்நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை *
தெள்ளார்வடக்குத்திருவீதிப்-பிள்ளை *
மணவாளயோகி திருவாய்மொழியைக்காத்த *
குணவாளரென்று நெஞ்சே! கூறு. (௩௯)

முந்துறவேபிள்ளான் முதலானோர்செய்தருளும் *
அந்தவியாக்கியைகளன்றாகில் * அந்தோ!
திருவாய்மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்கவல்ல
குருவார்? * இக்காலம்நெஞ்சே! கூறு. (௪0)

தெள்ளாரும்ஞானத் திருக்குருகைப்பிரான்
பிள்ளான் * எதிராசர்பேரருளால் * உள்ளாரும்
அன்புடனே மாறன்மறைப்பொருளையன்றுரைத்தது-*
இன்பமிகுமாறாயிரம். (௪௧)

தஞ்சீரைஞானியர்கள் தாம்புகழும்வேதாந்தி *
நஞ்சீயர்தாம் பட்டர்நல்லருளால் * எஞ்சாத
ஆர்வமுடன் மாறன்மறைப்பொருளையாய்ந்துரைத்தது-*
ஏரொன்பதினாயிரம். (௪௨)

நம்பிள்ளைதம்முடைய நல்லருளாலேவியிட *
பின்பெரியவாச்சான்பிள்ளையதனால் * இன்பா
வருபத்திமாறன் மறைப்பொருளைச்சொன்னது *
இருபத்து நாலாயிரம். (௪௩)

தெள்ளியதாநம்பிள்ளை செப்புநெறிதன்னை *
வள்ளல்வடக்குத்திருவீதிப் - பிள்ளை * யிந்த
நாடறிய மாறன்மறைப்பொருளை நன்குரைத்தது *
ஈடுமுப்பத்தாறாயிரம். (௪௪)

அன்போ டழகியமணவாளச்சீயர் *
பின்போருங்கற்றறிந்து பேசுகைக்கா * தம்பெரிய
போதமுடன் மாறன்மறையின்பொருளுரைத்தது *
ஏதமில்பன்னீராயிரம். (௪௫)

பெரியவாச்சான்பிள்ளை * பின்புள்ளவைக்கும்
தெரியவியாக்கியைகள்செய்வால் * அரிய
அருளிச்செயற்பொருளை யாரியர்கட்கிப்போது *
அருளிச்செயலாய்த்தறிந்து. (௪௬)

நஞ்சீயர்செய்த வியாக்கியைகள்நாலிரண்டுக்கு *
எஞ்சாமையாவைக்கு மில்லையே * தஞ்சீரால்
வையகுருவின்தம்பி மன்னுமணவாளமுனி *
செயயுமவைதானுமசில. (௪௭)

சீரார் வடக்குத்திருவீதிப்பிள்ளை * எழு
தேரார்தமிழ்வேதத்தீடுதனை * தாருமென
வாங்கி முன்நம்பிள்ளை யீயுண்ணிமாதவர்க்குத்
தாங்கொடுத்தார் * பின்னதனைத்தான். (௪அ)

ஆங்கவர்பால்பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை
தாங்கொடுத்தார் தம்மகனார்தங்கையில் * பாங்குடனே
நாலூர்பிள்ளைக்கவர்தாம் நல்லமகனார்க்கவர்தாம் *
மேலோர்க்கீந்தாரவரோமிக்கு. (௪௯)

நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை
யென்பர் * அவரவர்தமேற்றத்தால் * அன்புடையோர்
சாற்றுதிருநாமங்கள் தானென்றுநன்னெஞ்சே! *
ஏத்ததனைச்சொல்லிநீயின்று. (௫0)

துன்னுபுகழ்க்கந்தாடைத் தோழப்பர்தம்முகப்பால் *
என்னவுலகாரியரோ? வென்றுரைக்க * பின்னை
உலகாரியனெனும்பேர் நம்பிள்ளைக்கோங்கி *
விலகாமல் நின்றதென்றும்மேல். (௫௧)

பின்னை வடக்குத்திருவீதிப்பிள்ளை * அன்பால்
அன்னதிருநாமத்தையாதரித்து * மன்னுபுகழ்
மைந்தற்குச் சாற்றுகையால் வந்துபரந்தது * எங்கும்
இந்தத்திருநாமமிங்கு. (௫௨)

ஆ அன்னபுகழ்முடும்பை யண்ணலுலகாசிரியன் *
இன்னருளால்செய்தகலை யாவையிலும் * உன்னில்
திகழ்வசனபூடணத்தின்சீர்மை யொன்றுக்கில்லை *
புகழலவிவ்வார்த்தை மெய்யிப்போது. (௫௩)

முன்னம்குரவோர் மொழிந்தவசனங்கள்
தன்னை * மிகக்கொண்டு கற்றோர்தம்முயிர்க்கு * மின்னணியாச்
சேரச்சமைத்தவரோ சீர்வசனபூடண மென்
பேர் * இக்கலைக்கிட்டார்பின். (௫௪)

ஆர்வசனபூடணத்தி னாழ்பொருளெல்லாமறிவார்? *
ஆரதுசொன்னேரிலநுட்டிப்பார்? * ஓரொருவ
ருண்டாகி லத்தனைகாணுள்ளமே! * எல்லார்க்கும்
அண்டாத தன்றோவது? (௫௫)

உய்யநினைவுடையீர்! உங்களுக்குச் சொல்லுகின்றேன் *
வையகுருமுன்னம்வாய்மொழிந்த * செய்யகலை
யாம் வசனபூடணத்தினாழ்பொருளைக் * கற்றதனுக்
காம்நிலையில் நில்லுமறிந்து. (௫௬)

தேசிகர்பால்கேட்ட செழும்பொருளைச் * சிந்தைதன்னில்
மாசறவேயூன்ற மனனஞ்செய்து * ஆசரிக்க
வல்லார்கள்தாம் வசனபூடணத்தின் வான்பொருளை *
சல்லாததென்றோ கவர்ந்து? (௫௭)

சச்சம்பிரதாயம் தாமுடையோர் கேட்டக்கால் *
மெச்சும்வியாக்கியைதானுண்டாகில் * நச்சி
அதிகரியும்நீர் வசனபூடணத்துக்கற்ற
மதியுடையீர்! * மத்தியத்தராய். (௫அ)

சீர்வசனபூடணத்தின் செம்பொருளை * சிந்தைதன்னால்
தேறிலுமாம் வாய்கொண்டுசெப்பிலுமாம் * ஆரியர்காள்
என்றனக்குநாளு மினிதாகாநின்றதய்யோ! *
உந்தமக்கெவ்வின்பமுளதாம். (௫௯)

தன்குருவின்தாளிணைகள்தன்னி லன்பொன்றில்லாதார்
அன்புதன்பால்செய்தாலு மம்புயைகோன் * இன்பமிகு
விண்ணாடு தானளிக்கவேண்டியிரான் * ஆதலால்
நண்ணாரவர்கள் திருநாடு. (௬0)

ஞானமநுட்டானமிவை நன்றாகவேயுடைய
னான * குருவையடைந்தக்கால் * மாநிலத்தீர்!
தேனார்கமலத் திருமாமகள்கொழுநன் *
தானேவைகுந்தந்தரும். (சுக)

உய்யநினைவுண்டாகி லுங்குருக்கள்தம்பதத்தே *
வையும், அன்புதன்னை யிந்தமாநிலத்தீர்! * மெய்யுரைக்கேன்
பையரவில்மாயன் பரமபதமுங்களுக்காம் *
கையிலங்கு நெல்லிக்கனி. (சுஉ)

ஆசாரியன்செய்த வுபகாரமானவது *
தூய்தாகநெஞ்சுதன்னில் தோன்றுமேல் * தேசாந்
தரத்திலிருக்க மனந்தான்பொருந்தமாட்டாது- *
இருத்தலினியேதறியோம்யாம். (சுங)

தன்னாரியனுக்குத் தானடிமைசெய்வது- * அவன்
இந்நாடுதன்னிலிருக்கும்நாள் * அந்நே
ரறிந்துமதிலாசையின்றி * ஆசாரியனைப்
பிரிந்திருப்பாரார்? மனமே! பேசு. (சுச)

ஆசாரியன் சிச்சனாருயிரைப் பேணுமவன் *
தேசாரும் சிச்சனவன்சீர்வடிவை * ஆசையுடன்
நோக்குமவ னென்னும் நுண்ணறிவைக்கேட்டுவைத்தும் *
ஆர்க்குமந்நேர்நிற்கையரிதாம். (சுரு)

பின்பழகராம்பெருமாள்சீயர் * பெருந்திவத்தில்
அன்பதுவுமற்று மிக்கவாசையினால் * நம்பிள்ளைக்
கானவடிமைகள்செய் யந்நிலையைநன்னெஞ்சே! *
ஊனமறவெப்பொழுதுமோர். (சுசு)

ஆசாரியர்க ளனைவருமுன்னாசரித்த *
ஆசாரந்தன்னை யறியாதார் * பேசுகின்ற
வார்த்தைகளைக்கேட்டு மருளாதே * பூருவர்கள்
சீர்த்தநிலைதன்னை நெஞ்சே! சேர். (சுஎ)

நாத்திகரும்நற்கலையின் நன்னெறிசேராத்திகரும் *
ஆத்திகநாத்திகருமாமிவை * ஓர்த்துநெஞ்சே!
முன்னவரும்பின்னவரும் மூர்க்கரெனவிட்டு * நடுச்
சொன்னவரைநாளுந்தொடர். (சுஅ)

நல்லமண முள்ளதொன்றை நண்ணியிருப்பதற்கு *
நல்லமண முண்டாம் நயமதுபோல் * நல்ல
குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்கு *
குணமதுவேயாம் சேர்த்திகொண்டு. (சுகூ)

தீயகந்த முள்ளதொன்றைச் சேர்ந்திருப்ப தொன்றுக்கு *
தீயகந்தமேறும் திறமதுபோல் * தீய
குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்கு *
குணமதுவேயாம் செறிவுகொண்டு. (௭௦)

ஸ்ரீ முன்னோர் மொழிந்த முறைதப்பாமல்கேட்டு *
பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே * தந்நெஞ்சில்
தோற்றினதே சொல்லி யிதுசுத்தவுபதேசவர
லாற்றதென்பர் * மூர்க்கராவார். (௭௧)

[சாற்றுப்பாட்டுக்கள்.]

ஸ்ரீ பூருவா சாரியர்கள் போதமநுட்டானங்கள் *
கூறுவார் வார்த்தைகளைக் கொண்டுநீர் - தேறி *
இருள்தருமாஞாலத்தே யின்பமுற்றுவாழும் *
தெருள்தருமா தேசிகனைச் சேர்ந்து. (௭௨)

ஸ்ரீ இந்த உபதேசரத்தினமாலைதன்னை *
சிந்தைதனிலெந்நாளும் சிந்திப்பார் * எந்தை
எதிராச ரின்னருளுக்கென்றுமிலக்காகி *
சதிராக வாழ்ந்திடுவர் தாம். (௭௩)

---

மன்னுயிர்கா ளிங்கே மணவாள மாமுனிவன் *
பொன்னடியாம் செங்கமலப் போதுகளை * - உன்னிச்
சிரத்தாலே தீண்டில் * அமானவனும் நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்.

---

அடிவரவு.

எந்தை கற்றோர் ஆழ்வார்கள் பொய்கை அந்தமிழ் ஐப்பசி மற்றுள்ள பேதை மாறன் கார்த்திகை மன்னிய தை மாசி ஏரார் உண்டோ இன்றை மாநில மங்கள கோதில உண்டோ ஆழ்வார் இன்றோ பெரியாழ்வார் அஞ்சு குடி ஏரார் வாய்த்த இன்றுலகீர் ஆழ்வார்கள் எந்தை எண்ணரும் தொண்டர் மன்னு திருச் சீராரும் ஆழ்வார்களேற்றம் ஆழ்வார்களையும் தெருளுற்ற ஓரான் எம்பெருமானார் பின்னான் முந்துறவே தெள்ளாரும் தஞ்சீர் நம்பிள்ளை தெள்ளியதா அன்போடு பெரியவாச்சான் நஞ்சீயர் சீரார் ஆங்கவர் நம்பெருமாள் துன்னுபுகழ் பின்னை அன்ன முன்னம் ஆர்வசனம் உய்யநினைவு தேசிகர் சச்சம் சீர்வசனம் தன்குருவின் ஞானம் உய்யநினைவு ஆசாரியன் தன்னாரியன் ஆசாரியன் சிச்சன் பின்பழகராம் ஆசாரியர்கள் நாத்திகரும் நல்லமனம் தீயகந்தம் முன்னோர் பூருவாசாரியர்கள் இந்தவுபதேச மன்னுயிர்காள்.

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

---

உபதேசரத்தினமாலை முற்றும்.



மணவாளமாமுனிக ளருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

## தனியன்கள்.

(நேரிசைவெண்பா.)

அல்லும் பகலு மனுபவிப்பார் தங்களுக்குச் *
சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான் * நல்ல
மணவாளமாமுனிவன் மாறன்மறைக்குத் *
தணவா நூற்றந்தாதிதான்.

மன்னுபுகழ்சேர் மணவாளமாமுனிவன் *
தன்னருளா லுட்பொருள்கள் தன்னுடனே * சொன்ன
திருவாய்மொழிநூற்றந்தாதியாம் தேனை *
ஒருவாதருந்து நெஞ்சே யுற்று.

---

உயர்வே பரன்படியை யுள்ளதெல்லாம் தான்கண்டு *
உயர்வேத நேர்கொண்டுரைத்து * - மயர்வேதும்
வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன்சொல் *
வேராகவே விளையும் வீடு. (க)

வீடுசெய்து மற்றெவையும் மிக்கபுகழ்நாரணன்தாள் *
நாடுநலத்தாலடைய நன்குரைக்கும் * - நீடுபுகழ்
வண்குருகூர்மாற னிந்தமாநிலத்தோர் தாம்வாழ *
பண்புடனே பாடியருள் பத்து. (உ.)

பத்துடையோர்க்கென்றும் பரனெளியனாம் பிறப்பால் *
முத்திதரும் மாநிலத்தீர் மூண்டவன்பால் * - பத்திசெய்யும்
என்றுரைத்த மாறன்றனின்சொல்லால்போம் * நெடுகச்
சென்றபிறப்பாமஞ்சிறை. (ங)

அஞ்சிறையபுட்கள்தமை யாழியானுக்கு * நீர்
என்செயலைச் சொல்லுமென விரந்து * - விஞ்ச
நலங்கியதும் மாறனிங்கே நாயகனைத்தேடி *
(க) மலங்கியதும் பத்திவளம். (ச)

வளம்மிக்கமால்பெருமை மன்னுயிரின் தன்மை *
உளமுற்றங் கூடுருவ வோர்ந்து * - தளர்வுற்று

---

(க) மலங்குதல் - திண்டாட்டம்.

நீங்கவினை மாறனைமால் நீடிலகு சீலத்தால் *
பாங்குடனே சேர்த்தான் பரிந்து. (௫)

பரிவதிலீசன்படியைப் பண்புடனே பேசி *
அரியனலனாராதனைக்கென்று * - உரிமையுடன்
ஓதியருள்மாற னொழிவித்தா னிவ்வுலகில் *
பேதையர்கள்தங்கள் பிறப்பு. (௬)

பிறவியற்று நீள்விசும்பில் பேரின்ப முய்க்கும் *
திறமளிக்கும் சீலத் திருமால் * - அறவினியன்
பற்றுமவர்க்கென்று பகர்மாறன்பாதமே *
உற்றதுணையென் றுளமேயோடு. (௭)

ஓடுமனம்செய்கை யுரையொன்றினில்லாதாருடனே *
கூடிநெடுமாலடிமைகொள்ளும் நிலை * நாடறிய
ஓர்ந்தவன்றன்செம்மை யுரைசெய்த மாறனை *
ஏய்ந்துநிற்கும் வாழ்வா மிவை. (௮)

இவையறிந்தோர்தம்மளவி லீசனுவந்தாற்ற *
அவயவங்கள்தோறு மணையும் - சுவையதனைப்
பெற்று * ஆர்வத்தால்மாறன் பேசினசொல்பேச * மால்
பொற்றாள் நம்சென்னி † பொரும். (௯)

பொருமாழி சங்குடையோன் பூதலத்தே வந்து *
தருமாறோ ரேதுவறத் தன்னைத் * - திரமாகப்
பார்த்துரைசெய்மாறன் பதம்பணிகவென்சென்னி *
வாழ்த்திடுக வென்னுடையவாய். (௧௦)

வாயுந் திருமால் மறையநிற்க * ஆற்றாமை
போய்விஞ்சி மிக்கபுலம்புதலாய் * - (க) ஆய
அறியாதவற்றோடணைந்தழுத மாறன் *
செறிவாரை நோக்கும் திணிந்து. (௧௧)

திண்ணிதா மாறன் திருமால் பரத்துவத்தை *
நண்ணியவதாரத்தே நன்குரைத்த * - வண்ணமறிந்
தற்றார்கள் யாவ ரவரடிக்கே யாங்கவர்பால் *
உற்றாரை மேலிடாதான். (௧௨)

---

† பொரு என்று-ஒப்பாய், அத்தால் - சேருமென்றபடி.
(க) ஆய்தல் - ஆராய்தல்.

(உ) ஊனமறவே வந்துள்கலந் தமாலினிமை
யானது * அநுபவித்தற் காந்துணையா * - வானில்
அடியார்குழாங்கூட வாசையுற்ற மாறன் *
அடியாருடன் னெஞ்சே யாடு. (கங)

ஆடிமகிழ்வானி லடியார்குழாங்களுடன் *
கூடியின்ப மெய்தாக் குறையதனால் * - வாடிமிக
அன்புற்றார் தன்னிலைமை யாய்ந்துரைக்க மோகித்து *
துன்புற்றான் மாறனந்தோ !. (கச)

அந்தாமத்தன்பா லடியார்களோடிறைவன் *
வந்தாரத் தான்கலந்த வண்மையினால் * - சந்தாபம்
தீர்ந்த சடகோபன் திருவடிக்கே நெஞ்சமே! *
வாய்ந்தவன்பை நாடோறும்வை. (க௫)

வைகுந்தன்வந்து கலந்ததற்பின் வாழ்மாறன் *
செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து * - நைகின்ற
தன்மைதனைக் கண்டுன்னைத் தான்விடே னென்றுரைக்க *
(ங) வன்மையடைந்தான் கேசவன். (கசு)

கேசவனாலெந்தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும் *
தேசடைந்தாரென்று (ச) சிறந்துரைத்த * - வீசுபுகழ்
மாறன் மலரடியே மன்னுயிர்க்கெல்லாமுய்கைக்கு - *
ஆறென்றுநெஞ்சே யணை. (கஎ)

அணைந்தவர்கள்தம்முடனே யாயனருட்காளாம்*
(௫) குணந்தனையே கொண்டுலகைக்கூட்ட * - இணங்கிமிக
பாரினுபதேசம்செய் மாறன்மலரடியே *
வீசுபுக ழெம்மா வீடு. (கஅ)

எம்மாவீடும் வேண்டாவென்றனக்குன் தாளிணையே *
அம்மாவமையுமென வாய்ந்துரைத்த * நம்முடைய
வாழ்முதலாம் மாறன் மலர்த்தாளிணைசூடி *
கீழ்மையற்று நெஞ்சே கிளர். (கக)

கிளரொளிசேர் கீழுரைத்த பேறுகிடைக்க *
வளரொளிமால்சோலைமலைக்கே * - தளர்வறவே

---

(உ) ஊனம் - ஸங்கோசம். (ங) வன்மை - ஸ்தைர்யம்.
(ச) சிறந்து - நன்றாக.
(௫) "குணங்களையேகொண்டு" என்று பாடாந்தரம்.

நெஞ்சைவைத்துச் சேருமெனும் நீடுபுகழ்மாறன்தாள் *
முன்செலுத்துவோ மெம்முடி. (௨௦)

முடியார் திருமலையில் மூண்டுநின்ற மாறன் *
அடிவாரந்தன்னி லழகர் - வடிவழகைப்
பற்றி * முடியு மடியும் படிகலனும் *
முற்று மநுபவித்தான் முன். (௨௧)

முன்ன மழகொழில் மூழ்கும் குருகையர்கோன் *
இன்னவளவென்ன வெனக்கரிதாய்த் - தென்ன *
கரணக்குறையின் கலக்கத்தை * கண்ணன்
ஒருமைப்படுத்தா னொழித்து. (௨௨)

ஒழிவிலாக்கால முடனாகி மன்னி *
வழுவிலா வாட்செய்ய மாலுக்கு * - எழுசிகர
வேங்கடத்துப் பாரித்த மிக்கநலம் சேர்மாறன் *
பூங்கழலை நெஞ்சே புகழ். (௨௩)

புகழொன்றுமா லெப்பொருள்களும் தானாய் *
நிகழ்கின்றநேர்காட்டி நிற்க * மகிழ்மாறன்
எங்குமடிமைசெய விச்சித்து வாசிகமாய் *
அங்கடிமை செய்தான் மொய்ம்பால். (௨௪)

மொய்ம்பாரும்மாலுக்கு முன்னடிமை செய்துவப்பால் *
அன்பாலாட்செய்பவரை யாதரித்தும் * - அன்பிலா
மூடரைநிந்தித்தும் மொழிந்தருளும் மாறன்பால் *
தேடரிய பத்தி நெஞ்சே செய். (௨௫)

செய்ய பரத்துவமாய்ச் சீரார்வியூகமாய் *
துய்ய விபவமாய்த் தோன்றிவற்றுள் † * - எய்துமவர்க்
கிந்நிலத்தி லர்ச்சாவதார மெளிதென்றான் *
பண்ணுதமிழ் மாறன் பயின்று. (௨௬)

பயிலுந் திருமால் பதந்தன்னில் * நெஞ்சம்
தயலுண்டு நிற்கும் ததியர்க்கு - * இயல்வுடனே
ஆளானார்க்காளாகும் மாறனடி யதனில் *
ஆளாகார் சன்மம் முடியா. (௨௭)

முடியாத வாசைமிக ‡ முற்றுகரணங்கள் *
அடியார்தமைவிட் டவன்பால் - படியா * ஒன்

---

† "தோன்றிவற்றில்" என்றும்பாடம். ‡ "ஆசைமிகு" என்று பாடாந்தரம்.

றொன்றின் செயல்விரும்ப வுள்ளதெல்லாம் தாம்விரும்ப *
துன்னியதே மாறன்றன் சொல். (உஅ)

சொன்னாவில் வாழ்புலவீர்! சோறுகூறைக்காக *
மன்னாத மானிடரை வாழ்த்துதலா - லென்னாகும்? *
என்னுடனே மாதவனை யேத்துமெனும் குருகூர் *
மன்னருளால் மாறும் சன்மம். (உகூ)

சன்மம் பலசெய்து தானிவ்வுலகளிக்கும் *
நன்மையுடை மால்குணத்தை நாடோறும் * - இம்மையிலே
ஏத்துமின்பம் பெற்றே னெனுமாறனை யுலகீர்! *
நாத்தழும்ப வேத்துமொருநாள். (௩0)

ஒருநாயகமா யுலகுக்கு * வானோர்
இருநாட்டிலேறியுய்க்கு மின்பம் - திரமாகா *
மன்னுயிர்ப்போகம் தீது மாலடிமையேயினிதாம் *
பன்னியிவை மாறனுரைப்பால். (௩க)

பாலனைப்போல் சீழ்கிப் பரனளவில் வேட்கையால் *
காலத்தால் தேசத்தால் கைகழிந்த * - சால
அரிதான போகத்தி லாசையுற்று நைந்தான் *
குருகூரில் வந்துதித்த கோ. (௩உ)

கோவான வீசன் குறையெல்லாம் தீரவே *
ஓவாத காலத் துவாதிதனை * - மேவிக்
கழித்தடையக்காட்டி கலந்தகுணமாறன் *
வழுத்துதலால் வாழ்ந்ததிந்த மண். (௩௩)

மண்ணுலகில் முன்கலந்து மால்பிரிகையால் * - மாறன்
பெண்ணிலைமையாய்க் காதல் பித்தேறி * - எண்ணிடில்முன்
போலிமுதலானபொருளை யவனாய்நினைந்து *
மேல்விழுந்தான் மையல்தனின் வீறு. (௩ச)

வீற்றிருக்கும் மால்விண்ணில் மிக்கமயல்தன்னை *
ஆற்றுதற்காத் தன்பெருமை யானதெல்லாம் * - தோற்றவந்து
நன்றாகலக்கப்போற்றி நன்குகந்து வீறுரைத்தான் *
சென்ற துயர்மாறன் தீர்ந்து. (௩ரு)

தீர்ப்பாரிலாத மயல்தீரக்கலந்தமால் *
ஓர்ப்பாதுமின்றி யுடன்பிரிய * - நேர்க்க

அறிவழிந்துற்றாருமறக்கலங்க * பேர்கேட்
டறிவுபெற்றான் மாறன்சீலம். (௩௬)

சீலமிகு கண்ணன் திருநாமத்தாலுணர்ந்து *
மேலவன்றன் மேனிகண்டு மேவுதற்கு * - சால
வருந்தி யிரவும் பகலும் மாறாமல் கூப்பிட்டு - *
இருந்தனனே தென்குருகூரேறு. (௩௭)

ஏறுதிருவுடைய வீசனுகப்புக்கு *
வேறுபடி லென்னுடைமை மிக்கவுயிர் * - தேறுங்கால்
என்றனக்கும்வேண்டாவெனுமாறன் தாளேநெஞ்சே! *
நந்தமக்குப் பேறாக நண்ணு. (௩௮)

நண்ணாது மாலடியை நானிலத்தே வல்வினையால் *
எண்ணாராத்துன்பமுறு மிவ்வுயிர்கள் * - தண்ணிமையைக்
கண்டிருக்க மாட்டாமல் கண்கலங்கும் மாறனருள் *
உண்டேமக் குற்றதுணை யொன்று. (௩௯)

ஸ்ரீ ஒன்றுமிலைத்தே யிவ்வுலகம் படைத்த மால் *
அன்றியெனவாரு மறியவே * - நன்றாக
மூதலித்துப் பேசியருள் மொய்ம்மகிழோன் தாள்தொழவே *
காதலிக்கு மென்னுடைய கை. (௪0)

கையாரும் சக்கரத்தோன் காதலின்றிக்கேயிருக்க *
பொய்யாகப் பேசும் புறனுரைக்கு * - மெய்யான
பேற்றை யுபகரித்த பேரருளின் தன்மைதனை *
போற்றினனே மாறன் பொலிந்து. (௪௧)

பொலிகபொலிகவென்று பூமகள்கோன் தொண்டர் *
மலிவுதனைக் கண்டுகந்து வாழ்த்தி * - உலகில்
திருந்தாதார்தம்மைத் திருத்திய மாறன்சொல் *
மருந்தாகப் போகும் மனமாசு. (௪௨)

மாசறுசோதி கண்ணன் வந்து கலவாமையால் *
ஆசை மிகுந்து பழிக்கஞ்சாமல் * - ஏசறவே §
மண்ணில் மடலூர மாறனொருமித்தான் *
உள்நடுங்கத் தான்பிறந்த வூர். (௪௩)

ஊரவினைத்தமட லூரவுமொண்ணாதபடி *
கூரிருள்சேர் கங்குலுடன் கூடிநின்று * - பேராமல்

§ "ஏசவே" என்று பாடாந்தரம்.

நீதுசெய்யமாறன் திருவுளத்துச் சென்ற துயர் *.
ஓதுவதிங் கெங்ஙனேயோ. (சச)

எங்ஙனே நீர்முனிவ தென்னையினி நம்பியழகு *
இங்ஙனே தோன்றுகின்ற தென்முன்னே ‡ * - அங்ஙன்
உருவெளிப்பாடா வுரைத்ததமிழ் மாறன் *
கருதுமவர்க் கின்பக் கடல். (சரு)

கடல்ஞாலத் தீசனைமுன் காணாமல் நொந்தே *
உடனே வருகரிக்க லுற்று * திடமாக
வாய்ந்தவனாய்த் தான்பேசும் மாறனுரை யதனை *
ஆய்ந்துரைப்பா ராட்செய நோற்றார். (சசு)

நோற்றநோன் பாதியிலே னுன்றனைவிட் டாற்றகில்லேன் *
பேற்றுக் குபாயமுன்றன் பேரருளே - சாற்றுகின்றேன் *
இங்கெ னிலையென்னு மெழில்மாறன் சொல்வல்லார் *
அங்கமரர்க் காராவமுது. (சஎ)

ஸ்ரீ ஆராவமுதாழ்வா ராதரித்த பேறுகளை *
தாராமையாலே தளர்ந்துமிக * - தீராத
ஆசையுடனற்றாமைபேசி யலமந்தான் *
மாசறுசீர் மாறனெம்மான். (சஅ)

மாநலத்தால் மாறன் திருவல்லவாழ்புகப்போய் *
தானினைத்து வீழ்ந்தவ்வூர்தன்னருகில் * - மேல்நலங்கித்
துன்பமுற்றுச் சொன்ன சொலவுகற்பார் தங்களுக்கு *
பின்பிறக்க வேண்டா பிற. (சகூ)

பிறந்துலகம் காத்தளிக்கும் பேரருட்கண்ணா * உன்
சிறந்தகுணத்தா லுருகும் சீலத் - திறம்தவிர்ந்து *
சேர்ந்தநுபவிக்கும்நிலை செய்யென்ற சீர்மாறன் *
வாய்ந்த பதத்தே மனமே வைகு. (ருo)

வைகல்திருவண்வண்டூர் வைகுமிராமனுக்கு * - என்
செய்கைதனைப் புள்ளினங்காள் செப்புமென * - கைகழிந்த
காதலுடன் தூதுவிடும் காரிமாறன் கழலே *
மேதினியீர் நீர்வணங்குமின். (ருக)

மின்னிடையார் சேர்கண்ணன் மெத்தெனவக் தானென்று *
தன்னிலைபோய்ப் பெண்ணிலையாய்த் தான்தள்ளி * - உன்னுடனே

‡ "என்முன்னென" என்ற பாடாந்தரம்.

கூடே - னென்றும் குருகையர்கோன் தாள்தொழவே *
நாடோறும் நெஞ்சமே நல்கு. (ருஉ)

நல்லவலத்தால் நம்மைச்சேர்த்தோன் முன் நண்ணுரா *
வெல்லும் விருத்த விபூதியனென்று * - எல்லையறத்
தானிருந்து வாழ்த்தும் தமிழ்மாறன் சொல்வல்லார் *
வானவர்க்கு வாய்த்த குரவர். (ருங)

குரவைமுதலாங் கண்ணன் கோலச் செயல்கள் *
இரவுபக லென்னும லென்றும் * - பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப் பேசும் பராங்குசன்றன் *
சொற்றேனில் நெஞ்சே துவள். (ருச)

துவளறுசீர் மால்திறத்துத் தொன்னலத்தால் * நாளும்
துவளறுதன் சீலமெல்லாம் சொன்னன் * - துவளறவே
முன்ன மநுபவத்தில் மூழ்கின்ற மாறனதில் *
மன்னு முவப்பால் வந்த மால்.

மாலுடனே தான்கலந்து வாழப் பெருமையால் *
சாலநைந்து தன்னுடைமை தானடையக் - கோலியே *
தானிகழ வேண்டாமல் தன்னைவிடல் சொல்மாறன் *
ஊனமறுசீர் நெஞ்சே யுண். (ருசு)

உண்ணுஞ்சோறுதி யொருமூன்று மெம்பெருமான் *
கண்ணனென்றே நீர்மல்கிக் கண்ணிணைகள் * - மண்ணுலகில்
மன்னுதிருக் கோளூரில் மாயன்பால் போம் மாறன் *
பொன்னடியே நந்தமக்குப் பொன். (ருஎ)

பொன்னுலகு பூமியெல்லாம் புள்ளினங்கட்கே வழங்கி *
என்னிடனா மாலுக் கியம்புமென * - மன்னுதிரு
நாமுதல்தூது நல்கிவிடும் மாறனையே *
நீடுலகீர் போய்வணங்கும் நீர். (ருஅ)

நீராகிக் கேட்டவர்கள் நெஞ்சழிய * மாலுக்கும்
ஏரார் விசும்பி லிருப்பரிதா * - ஆராத
காதலுடன் கூப்பிட்ட காரிமாறன் சொல்லை *
ஓதிடவே யுய்யு முலகு. (ருகூ

ஸ்ரீ உலகுய மால்நின்ற வுயர் வேங்கடத்தே *
அலர்மகளைமுன்னிட் டவன்றன் - மலரடியே *

வன்சரணுய்ச் சேர்ந்த மகிழ்மாறன் தாளிணையே *
உன்சரணாய் நெஞ்சமே யுள். (௬0)

உண்ணிலா வைவருட னிருத்தி யிவ்வுலகில் *
எண்ணிலா மாயனெனைக்கலிய - வெண்ணுகின்றான் *
என்றுகினைந் தோலமிட்ட வின்புகழ்சேர் மாறனென *
குன்றிவிடுமே பவக் கங்குல். (௬௧)

ஸ்ரீ கங்குல் பகலரதி கைவிஞ்சி மோகமுற *
அங்கதனைக்கண்டோ ரரங்கரைப் பார்த்து *- இங்கிவள்பால்
என்செயநீரெண்ணுகின்ற தென்னுமிலை சேர்மாறன் *
அஞ்சொலுற நெஞ்சு வெள்ளையாம். (௬௨)

வெள்ளியநாமங்கேட்டு விட்டகன்றபின் மோகம் *
தெள்ளியமால் தென்திருப்பேர் சென்று புக * - உள்ளமங்கே
பற்றிநின்ற தன்மை பகரும் சடகோபற்கு *
அற்றவர்கள்தா மாழியார் (௬௩)

ஆழிவண்ணன் தன்விசயமானவை முற்றுங்காட்டி
வாழிதனுலென்று மகிழ்ந்துநிற்க * - ஊழிலவை
தன்னை யின்றுபோல் கண்டு தானுரைத்த மாறன்சொல் § *
பன்னுவரோ நல்லது கற்பார். (௬௪)

கற்றோர் கருதும் விசயங்களுக் கெல்லாம் *
பற்றும் விபவகுணப் பண்புகளை * - உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர் தம்மிழவை வாய்ந்துரைத்த மாறன்சொல் *
பண்ணி லினிதான தமிழ்ப்பா. (௬௫)

பாமருவு வேதம பகர்மால குணங்களுடன் *
ஆமழகு வேண்டப் பாடாமவற்றை * - தூமனத்தால்
நண்ணியவனைக்காண நன்குருகிக் கூப்பிட்ட *
அண்ணலை நண்ணு ரேழையர். (௬௬)

ஏழையர்கள் நெஞ்சை யிளகுவிக்கும் மாலழகு *
சூழவந்து தோன்றித் துயர்விளைக்க * ஆழுமனந்
தன்னுடனே யவ்வழகைத் தானுரைத்த மாறன்பால் *
மன்னுமவர் தீவினைபோம் மாய்ந்து. (௬௭)

மாயாமல் தன்னைவைத்த வைசித்திரியாலே *
தீயாவிசித்திரமாச் சேர்பெற்றுளோர் - பேர்யாமல் *

§ "மாறன்றன்" என்று பாடாந்தரம்.

வாய்ந்துரைக்கும் மாயன் வளமுரைத்த மாறனைநாம் *
ஏய்ந்துரைத்து வாழுநாளென்று. (௬௮)

என்றனைநீ யிங்குவைத்த தேதுக்கென் * மாலும்
என்றனக்கு மென்றமர்க்கு மின்பமதா * - நன்றுகவி
பாடவெனக் கைம்மாறிலாமை * பகர்மாறன்
பாடணைவார்க் குண்டா மின்பம். (௬௯)

இன்பக்கவி பாடுவித்தோனை * இந்திரையோடு
அன்புற்று வாழ் திருவாறன் விளையில் * - துன்பமறக்
கண்டடிமை செய்யக் கருதிய மாறன்கழலே *
திண்டிறலோர் யாவர்க்கும் தேவு. (௭௰)

தேவனுறை பதியில் சேரப்பெறாமையால் *
மேவுமடியார் வசனாய் மெய்ந்நிலையும் * - யாவையுந்தா
னாம்நிலையும் சங்கித் தவைதெளிந்த மாறன்பால் *
மாநிலத்தீர் நங்கள் மனம். (௭௧)

நங்கருத்தை நன்றாக நாடி நிற்கும் மாலறிய *
இங்கிவற்றி லாசையெமக்குளதென் - சங்கையினால் *
தன்னுயிரில் மற்றில்நசை தானொழிந்த மாறன்றான் *
அந்நிலையை யாய்ந்துரைத்தா னங்கு. (௭௨)

அங்கமரர்பேண வவர்நடுவே வாழ்திருமாற்கு *
இங்கோர்பரிவரிலை யென்றஞ்ச * - எங்கும்
பரிவருளரென்னப் பயந்தீர்த்த மாறன் *
வரிகழல்தாள் சேர்ந்தவர் வாழ்வார். (௭௩)

வாராம லச்சமினி மால்தன் வலியினையும் *
ஓரார் பரிவருடன் சேர்த்தியையும் * - பாருமெனத்
தானுகந்த மாறன்தாள் சார்நெஞ்சே சாராயேல் *
மானிடவரைச் சார்ந்துமாய். (௭௪)

மாயன்வடிவழகைக் காணாதவல்விடா
யாய் * அதற வஞ்சி யழுதலற்றும் * - தூயபுகழ்
உற்ற சடகோபனை நா மொன்றிநிற்கும்போதுபகல் *
அற்றபொழுதான தெல்லியாம். (௭௫)

எல்லி பகல்கடந்த வெந்தவிடாய் திருநகர்க்கு *
மெல்லவந்து தான்கலக்க வேணுமென * - நல்லவர்கள்

மன்னு கடித்தானத்தே மாவிருக்க மாறன்கண்டு *
இக்கிலையைச் சொன்னு னிருந்து. (எசு)

இருந்தவன்தான் வந்திங் கிவரெண்ணமெல்லாம் *
திருந்தவிவர் தந்திறத்தே செய்து * - பொருந்தக்
கலந்தினியனுயிருக்கக் கண்டசடகோபர் *
கலந்தநெறி கட்டுரைத்தார் கண்டு. (எஎ)

கண்ணிறைய வந்துகலந்தமா லிக்கலவி *
திண்ணிலையா வேணுமெனச் சிந்தித்து * - தண்ணிதெனும்
ஆருயிரி னேற்றமதுகாட்ட ஆய்ந்துரைத்தான் *
காரிமாறன் தன் கருத்து. (எஅ)

கருமால் திறத்தி லொருகன்னிகையாம் மாறன் *
ஒருமாகலவி யுரைப்பால் * - திரமாக
அந்நியருக்காகா தவன்றனக்கே யாகுமுயிர் *
இந்நிலையை யோர நெடிதா. (எகூ)

ஃ நெடுமாலழகுதனில் நீள்குணத்தில் * ஈடு
படுமா நிலையுடைய பத்தர் * - அடிமைதனில்
எல்லைநிலம் தானுக வெண்ணினுன் மாறன் * அது
கொல்லைநிலமான நிலைகொண்டு. (அ0)

கொண்டபெண்டிர் தான்முதலாக் கூறுமுற்றுர் * கன்மத்தால்
அண்டினவரென்றே யவரைவிட்டு * - தொண்டருடன்
சேர்க்கும் திருமாலைச் சேருமென்றுன் * ஆர்க்குமிதம்
பார்க்கும் புகழ்மாறன் பண்டு. (அக)

பண்டையுறவான பரனைப் புளிங்குடிக்கே
கண்டு * எனக்கெல்லாவுறவின் காரியமும் * - தண்டற நீ
செய்தருளென்றேயிரந்த சீர்மாறன்தாளிணையை *
உய்துணையென் றுள்ளமே யோர். (அஉ)

ஓரா நீர் வேண்டினவையுள்ளதெல்லாம் செய்கின்றேன் *
நாராயணனன்றோ நானென்று * - பேருறவைக்
காட்ட வவன்சீலத்தில் கால்தாழ்ந்த மாறனருள் *
மாட்டிவிடும் நம்மனத்து மை. (அங)

மையார்கண் மாமார்பில் மன்னும்திருமாலை *
கையாழி சங்குடனே காணவெண்ணி * - மெய்யான

காதலுடன் கூப்பிட்டுக் கண்டுகந்த மாறன்பேர் *
ஓதவுய்யுமே யின்னுயிர். (அச)

இன்னுயிர்மால் தோற்றினதிங் கென்னெஞ்சிலென்று * கண்ணால்
அன்றவனைக் காணவெண்ணி யாண்பெண்ணாய் * - பின்னை யவன்
தன்னை நினைவிப்பவற்றால் தான் தளர்ந்த மாறனருள் *
உன்னுமவர்க்குள்ள முருகும். (அரு)

உருகுமாலென்னெஞ்ச முன் செயல்களெண்ணி *
பெருகுமால் வேட்கையெனப்பேசி * மருவுகின்ற
இன்னாப்புடனவன்சீ ரேய்ந்துரைத்த மாறன்சொல் *
என்னாச்சொல்லாதிருப்ப தெங்கு. (அசு)

எங்காதலுக்கடி மாலேய்ந்த வடிவழகென்று *
அங்காதுபற்றாசா வாங்கவன்பால் * - எங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப்போகவிடும் மாறன்றாள் *
உள்ளினர்க்குத் தீங்கை யறுக்கும். (அஎ)

அறுக்குமிடரென் றவன்பா லாங்குவிட்டதூதர் *
மறித்துவரப் பற்றா மனத்தால் * - அறப்பதறி
செய்யதிருநாவாயில் செல்லநினைந்தான் மாறன் *
மையலினாற் செய்வறியாமல். (அஅ)

நல்லடிமைசெய்யும்நாள் மால்தன்னைக்கேட்க * அவன்
சொல்லுமளவும் பற்றாத்தொன்னலத்தால் * - செல்கின்ற
ஆற்றாமைபேசி யலமந்த மாறனருள் *
மாற்றாகப் போகு மென்றன் மால். (அகூ)

ஸ்ரீ மாலுமதுவாஞ்சைமுற்றும் மூள்ளுமுடம்பின் முடிவில் *
சாலநண்ணிச் செய்வனெனத் தானுகந்து * - மேலவனைச்
சீரார்கணபுரத்தே சேருமெனும் சீர்மாறன் *
தாராளே நந்தமக்குத் தாள். (கூ0)

தாளடைந்தோர்தங்கட்குத் தானேவழித்துணையாம் *
காளமேகத்தைக் கதியாக்கி * மீளுதலாம்
ஏதமிலாவின்னுலகி லேகவெண்ணும் மாறனென *
ஏதமுள்ளதெல்லாம் கெடும். (கூக)

கெடுமிடர் வைகுந்தத்தைக் கிட்டினாப்போல *
நடமுடை யநந்தபுரந்தன்னில் * - படவரவில்

கண்டயில் மாற்காட்செய்யக் காதலித்தான்மாறன் * உயர்
விண்டனிலுள்ளோர் வியப்பவே. (௯௨)

வேய்மருதோ ளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தை *
தான்மருவாத் தன்மையினல் * தன்னையின்னம்பூமியிலே
வைக்குமெனச் சங்கித்து மால்தெளிவிக்கத் தெளிந்த *
தக்கபுகழ்மாற னெங்கள்சார்வு. (௯௩)

சார்வாகவே யடியில் தானுரைத்த புத்திதான் *
சீரார் பலத்துடனே சேர்ந்ததனை * - சோராமல்
கண்டுரைத்த மாறன் கழலிணையே நாடோறும் *
கண்டுகக்கு மென்னுடைய கண். (௯௪)

கண்ணனடியிணையில் காதலுறுவார்செயலை *
திண்ணமுறவே சுருங்கச்செப்பியே * - மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கை தலைகட்டினன் மாறன் *
ஆனபுகழ்சேர் தன்னருள். (௯௫)

அருளாலடியிலெடுத்த மாலன்பால் *
இருளார்ந்த தம்முடம்பை யிச்சித்து * - இருவிசும்பில்
இத்துடன் கொண்டேக விவரிசைவுபார்த்திருந்த *
சுத்திசொல்லும் மாறன் செஞ்சொல். (௯௬)

செஞ்சொற்பரன்றனது சீரார்ம் மேனிதனில் *
வஞ்சித்துச் செய்கின்ற வாஞ்சைதனின் * - விஞ்சுதலைக்
கண்டவனைக் காற்கட்டிக் கைவிடுவித்துக் கொண்ட *
திண்டிறல் மாறன் நந்திரு. (௯௭)

ஶ்ரீ திருமால் தம்பால் விருப்பம்செய்கின்ற நேர்கண்டு - *
அருமாயத் தன்றகல்விப்பானென் * - பெருமால் நீ
இன்றென்பால் செய்வா னென்னென்ன இடருற்றுகின்றான் *
துன்னுபுகழ் மாறனைத் தான் சூழ்ந்து. (௯௮)

[சாற்றுப்பாட்டுக்கள்.]

ஶ்ரீ சூழ்ந்துநின்றமால்விசும்பில் தொல்லைவழிகாட்ட *
ஆழ்ந்ததனை முற்றுமநுபவித்து * - வாழ்ந்தங்
கடியருடனே யிருந்தவாற்றை யுரைசெய்தான் *
முடிமகிழ்சேர் ஞானமுனி. (௯௯)

ஸ்ரீ முனிமாறன் முன்புரைசெய் முற்றின்பம் நீங்கி *
தனியாகின்று தளர்ந்து * - கனியாம்
பரமபத்தியால்நைந்து பங்கயத்தாள்கோனை *
ஒருமையுற்றுச் சேர்ந்தா ருயர்ந்து. (௧00)

மணவாளமாமுனிகள் திருவடிகளேசரணம்

திருவாய்மொழிநூற்றந்தாதி ஸம்பூர்ணம்.

---

மணவாளமாமுனிகளருளிச்செய்த

## ஆர்த்திப்ரபந்தம்.

---

தனியன்கள்.

(நேரிசைவெண்பா.)

தென்பயிலுந்தாரானெதிராசன் சேவடிமேல் *
தான்பரமபத்தி தலையெடுத்து * - மாந்தர்க்
குணவாகவார்த்தியுட னெண் டமிழ்கள் செய்தான் *
மணவாளமாமுனிவன் வந்து.

வம்பவிழ்தார் வண்மை மணவாளமாமுனிகள் *
அம்புவியிற்கால்பொருந்தா வார்த்தியினால் * - உம்பர்தொழும்
விண்ணுலகிற் செல்ல விரைந்தெதிராசன் பதங்கள் *
நண்ணியுரைத்தார் நமக்கு.

---

வாழியெதிராசன் வாழியெதிராசன் *
வாழியெதிராசனென வாழ்த்துவார் * - வாழியென
வாழ்த்துவார் வாழியெனவாழ்த்துவார் * தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர்தலை. (௧)

இராமாநுசாயநமவென்று சிந்தித்து - *
இராமாநுசரோடிறைப்பொழுது * இராமாநு
சிந்திப்பார் தாளிணையில் சேர்ந்திருப்பார் * தாளிணையை
வந்திப்பார் விண்ணோர்கள்வாழ்வு. (௨)

தந்தை நற்றாய் தாரம் தனயர் பெருஞ்செல்வம் *
என்றனக்குநீயே யெதிராசா! * - இந்தநிலைக்

கோரதவிவ்வுடலை யின்றே யறுத்தருளப் *
பாராததென்னோ? பகர். (ங)

இந்தவுடற்சிறைவிட்டெப்பொழுது யானேகி *
அந்தமில் பேரின்பத்துளாகுவேன் * - அந்தோ!
இரங்காயெதிராசா என்னையினியுய்க்கை *
பரங்கா ணுனக்குணர்ந்துபார். (ச)

தன்புதல்வன் கூடாமல் தான்புசிக்கும் போகத்தால் *
இன்புறுமோ தந்தை? எதிராசா! * - உன்புதல்வ
னன்றோயா னுனாயா யாதலால் * உன்போகம்
நன்றோ வெனையொழிந்தநாள். (ரு)

வேம்புமுற்றக் கைப்புமிகுவதுபோல் * வெவ்வினையேன்
தீம்புமுற்றும் தேகமுற்றிச்செல்லுங்கால் * - ஆம்பரிசால்
ஏற்கவே சிந்தித்தெதிராசா! * இவ்வுடலைத்
தீர்க்கவேயான வழி செய். (சு)

அன்னை குடிநீரருந்தி * முலையூண்குழவி
தன்னுடைய நோயைத் தவிராளோ? * - என்னை!
எனக்காவெதிராசாவெல்லாம் நீசெய்தால் *
உனக்கது தாழ்வோ? வுரை. (எ)

தன்குழவி வான்கிணற்றைச் சார்ந்திருக்கக்கண்டிருந்தாள் *
என்பதன்றோ அன்னைபழியேறுகின்றாள் * - நன்குணரில்
என்னாலே யென்னுசமேது மெதிராசா! *
உன்னாலே யாமுறவை யோர். (அ)

கூபத்தில் வீழும் குழவியுடன் குதித்து * - அவ்
வாபத்தைநீக்குமந்த வன்னைபோல் * - பாபத்தால்
யான்பிறப்பேனேனு மினி யெந்தை யெதிராசன் *
தான்பிறக்கு மென்னை யுய்ப்பதா. (கூ)

பூமகள்கோன் தென்னரங்கர் பூங்கழற்குப் பாதுகமாய் *
தாம்மகிழும் செல்வச்சடகோபர் * - தேமலர்த்தாட்
கேய்ந்தினிய பாதுகமாமெந்தை யிராமாநுசனை *
வாய்ந்தெனது நெஞ்சமே வாழ். (க0)

உன்னையொழிய வொருதெய்வம் மற்றறியா *
மன்னு புகழ்சேர் வடுகநம்பி - தன்னிலைமை *

என்றனக்கு நீ தந் தெதிராசா! * எந்நாளும்
உன்றனக்கே யாட்கொ ளுகந்து. (கக)

தேசந்திகழும் திருவாய்மொழிப்பிள்ளை *
மாசில் திருமலையாழ்வார் * என்னை - நேசத்தால்
எப்படியே யெண்ணி யுன்பால் சேர்த்தா ரெதிராசா! *
அப்படியே நீ செய்தருள். (கஉ)

எதிராசன்வாழி யெதிராசன்வாழி *
எதிராசன் வாழி யென்றென்றேத்தி * - சதிராக
வாழ்வார்கள் தாளிணைக்கீழ் வாழ்வார்கள் * பெற்றிடுவர்
ஆழ்வார்கள்தங்க ளருள். (கங)

அதிகாரமுண்டே லரங்கரிரங்காரோ ? *
அதிகாரமில்லாதார்க்கன்றோ - எதிராசா
நீயிரங்கவேண்டுவது * நீயு மதிகாரிகளுக்
கேயிரங்கில் * என் செய்வோம் யாம். (கச)

எம்பெருமானார் திருவடிகளேசரணம்
என்பதுவே நாவுரைக்கும் * இத்தாலென் - அன்பவர்பால் *
இப்போதளவும் யானொன்றும் காண்கின்றிலேன் *
எப்போதுண்டாவ தினி?. (கரு)

ஆகாத தென்றறிந்தும் பிறர்க்குரைத்தும் *
ஆகாததே செய்வ னாதலால் * - மோகாந்த
னென்று நினைத் தென்னை யிகழா வெதிராசா! *
என்றுன்னடி சேர்வன் யான்?. (கசு)

பொல்லாங்கனைத்தும் பொதிந்துகொண்டு * நன்மையிலொன்
றில்லாவெனக்கு மெதிராசா! * - நல்லார்கள்
நண்ணும்திருநாட்டை நான்தருவனென்று நீ *
தண்ணென்றிருக்கிற தென்றான் ?. (கஎ)

என்று விடிவதெனக் கெந்தா யெதிராசா! *
ஒன்றுமறிகின்றிலே னுரையாய் * - குன்றாமல்
இப்படியே யிந்தவுயிர்க் கென்று மிருளேவிளைக்கும் *
இப்பவமாம் நீண்டவிரவு. (கஅ)

அல்லும்பகலும் யானுக்கை வழியுழன்று *
செல்லுமதுன் தேசுக்குத் தீங்கன்றோ * - நல்லார்கள்

தந்தனயர் நீசர்க்காட்செய்யச் சகிப்பரோ!
எந்தையெதிராசர் விசை. (௧௯)

(எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.)

போம்வழியைத்தருமென்று மின்பமெல்லாம்
பொசித்துவழிபோய் * அமுதவிரசையாற்றில்
நாம்மூழ்கி மலமற்றுத் தெளிவிசும்பை
நண்ணி நல்திகழும் மேனிதனைப்பெற்று *
தாமமரர்வந்தெதிர்கொண்டலங்கரித்துச்
சற்கரிப்ப மாமணிமண்டபத்துச் சென்று *
மாமலராள்கோன் மடியில்வைத்துகக்கும்
வாழ்வுநமக்கெதிராச னருளும் வாழ்வே. (௨0)

(கட்டளைக்கலித்துறை.)

திருமலையாழ்வார் திருவாய்மொழிப்பிள்ளைசீரருளால் *
தருமதிகொண்டவர்தம்மையுந்தாரகராக வெண்ணி
யிருமனமே * அவர்க்காக எதிராசரெமைக்கடுகப்
பரமபதந்தன்னிலேற்றுவர் * என்னபயம் நமக்கே. (௨௧)

தீதற்றஞானத்திருவாய்மொழிப்பிள்ளை சீரருளால் *
ஏதத்தைமாற்றுமெதிராசர்தம் மபிமான மென்னும் *
போதத்தையேறிப் பவமாம் புணரிதனைக்கடந்து *
கோதற்றமாதவன் பாதக்கரையைக் குறுகுவனே. (௨௨)

(எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.)

அடியார்கள்குழாங்க ளழகோலக்கமிருக்க
ஆநந்தமயமான மாமணிமண்டபத்து *
படியாதுமில் படுக்கையாயிருக்கு மநந்தன்
பணாமணிகள்தன்னி னொளிமண்டலத்தினிடையில் *
வடிவாரும்மாமலராள் வலவருகும் மற்றை
மண்மகளு மாய்மகளுமிடவருகுமிருக்க *
நடுவாகவீற்றிருக்கும் நாரணனைக்கடுக
நானநுபவிக்கும்வகை நல்கெனெதிராசா!. (௨௩)

இந்தவுடல்விட் டிரவிமண்டலத்தூடேகி
இவ்வண்டங்கழித் திடையிலாவரணமேழ்போய் *
அந்தமில் பாழ்கடந் தழகார்விரசைதனிற்குளித்து அங்
கமானவனாலொளிக்கொண்டசோதியும் பெற்று - * அமரர்

வந்தெதிர்கொண்டலங்கரித்து வாழ்த்திவழிநடத்த
    வைகுந்தம்புக்கு மணிமண்டபத்துச்சென்று *
நந்திருமாலடியார்கள் குழாங்களுடன்கூடும்
    நாளெனக்குக்குறுகும்வகை நல்கெனெதிராசா!. (௨௪)

என்றுநிர்ஹேதுகமாக வென்னையபிமானித்து
    யானுமறிந்துனக்கேயாயிருக்கும்வகை செய்தாய் *
அன்றுமுதலின்றளவுமநவரதம்பிழையே
    அடுத்தடுத்துச்செய்வ தநுதவிப்பதினிச்செய்யேன் *
என்றுனைவந்திரப்பதா மென்கொடுமைகண்டும்
    இகழாதே யிரவுபகலடிமைகொண்டுபோந்தாய் *
இன்றுதிருநாடு மெனக்கருளவெண்ணுகின்றாய்
    இனிக்கடுகச்செய்தருளவேணுமெதிராசா. (௨௫)

தென்னரங்கர்தமக்காமோ தேவியர்கட்காமோ
    சேனையர்கோன்முதலான சூரியர்கட்காமோ *
மன்னியசீர்மாறன் அருள்மாரிதனக்காமோ
    மற்றுமுள்ள தேசிகர்கள்தங்களுக்குமாமோ *
என்னுடையபிழைபொறுக்க யாவருக்குமுடியும்
    எதிராசா வுனக்கன்றியாரொருவர்க்காகேன் *
உன்னருளாலெனக்குருசிதன்னையுமுண்டாக்கி
    ஒளிவிசும்பிலடியேனை யொருப்படுத்து விரைந்தே. (௨௬)

இவ்வுலகிலினியொன்று மெண்ணாதே நெஞ்சே!
    இரவுபகலெதிராசரெமக்கினிமேலருளும் *
அவ்வுலகை யலர்மகள்கோனங்கிருக்குமிருப்பை
    அடியார்கள்குழாங்கள்தமை அவர்களநுபவத்தை *
இவ்வுயிருமதுக்கிட்டுப்பிறந்திழந்துகிடந்த
    தென்னுமத்தை யின்றுமதுக்கிடைச்சுவராய்க்கிடக்கும் *
வெவ்வினையால் வந்தவுடல் விடும்பொழுதைவிட்டால்
    விளையுமின்பந்தன்னை முற்றும்விடாமலிருந்தெண்ணே. (௨௭)

பண்டுபலவாரியரும் பாருலகோருய்யப்
    பரிவுடனேசெய்தருளும் பலகலைகள்தம்மை *
கண்டதெல்லாமெழுதியவைகற்றிருந்தும் பிறர்க்குக்
    காதலுடன்கற்பித்தும் காலத்தைக்கழித்தேன் *
புண்டரீகைகேள்வனுறை பொன்னுலகுதன்னில்
    போகமினைவொன்றுமின்றிப் பொருந்தியிங்கேயிருந்தேன் *

எண்டிசையுமேத்துமெதிராசன்றுள்ளாலே
எழில்விசும்பேயன்றி யிப்போதென்மனமெண்ணுதே. (௨௮)

(தாழிசை.)

சாருவாகமதம்நீறுசெய்து சமணச்செடிக்கனல்கொளுத்தியே
சாக்கியக்கடலைவற்றுவித்து மிருசாங்கியக்கிரிமுறித்திட் *
மாறுசெய்திடு கணாதவாதியர்கள்வாய்தகர்த் தறமிகுத்துமேல்
வந்தபாசுபதர்சிந்தியோடும்வகை வாதுசெய்தவெதிராசனார் *
கூறுமா குருமதத்தொடோங்கியகுமாரிலன்மதமவற்றின்மேல்
கொடியதர்க்கசரம் விட்டபின் குறுகிமாயவாதியரைவென்றிட *
மீறிவாதில் வருபாற்கரன்மதவிலக்கடிக்கொடி யெறிந்துபோய்
மிக்கயாதவமதத்தைமாய்த்த பெருவீரர் நாளும் மிகவாழியே. (௨௯)

(எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.)

சீராருமெதிராசர் திருவடிகள்வாழி
திருவரையிற்சாத்திய செந்துவராடைவாழி *
ஏராரும் செய்யவடிவெப்பொழுதும்வாழி
இலங்கியமுந்நூல்வாழி யிணைத்தோள்கள்வாழி *
சோராததுய்யசெய்யமுகச்சோதிவாழி
தூமுறுவல்வாழி துணைமலர்க்கண்கள்வாழி *
ஈராறுதிருநாமமணிந்தவெழில்வாழி
இனிதிருப்போ டெழில்ஞானமுத்திரைவாழியவே. (௩0)

அறுசமயச்செடியதனை யடியறுத்தான்வாழியே
அடர்ந்துவரும் குதிட்டிகளை யறத்துறந்தான்வாழியே *
செறுகலியைச்சிறிதுமறத்தீர்த்துவிட்டான்வாழியே
தென்னரங்கர்செல்வமுற்றும் திருத்திவைத்தான்வாழியே
மறையதனில்பொருளனைத்தும் வாய்மொழிந்தான்வாழியே
மாறனுரைசெய்த தமிழ்மறைவளர்த்தோன்வாழியே *
அறம்மிகுநற்பெரும்பூதூரவதரித்தான் வாழியே
அழகாருமெதிராசரடியிணைகள்வாழியே. (௩௧)

ஆசிரியச்சந்தவிருத்தம்.

சங்கரபாற்கரயாதவபாட்ட பிரபாகரர்தங்கள்மதம்
சாய்வுறும்வாதியர்மாய்குவரென்று சதுமறைவாழ்ந்திடுநாள் *
வெங்கலியிங்கினியில்லைநமக்கிலை யென்றுமிகத்தளர்நாள்
மேதினிநஞ்சுமையாறுமெனத்துயர்விட்டுவிளங்கியநாள் *
மங்கையராளிபராங்குசமுன்னவர் வாழ்வுமுளைத்திடுநாள்
மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள் *

செங்கயல்வாவிகள் சூழ்வயல்காளும் சிறந்தபெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார்வந்தருளிய திருவாதிரைநாளே. (௩௨)

(எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.)

இன்னமெத்தனைகாலமிந்தவுடம்புடன் யானிருப்பேன்
இன்னபொழுதுடம்புவிடு மின்னபடியதுதான் *
இன்னவிடத்தேயதுவு மென்னுமிவையெல்லாம்
எதிராசாநீயறிதி யானிவையொன்றறியேன் *
என்னையினியிவ்வுடம்பைவிடுவித்துன்னருளால்
ஏராரும்வைகுந்தத்தேற்றநினைவுண்டேல் *
பின்னைவிரையாமல் மறந்திருக்கிறதென் பேசாய்
பேதைமைதீர்த்தென்னை யடிமைகொண்ட பெருமானே. (௩௩)

முன்னைவினை பின்னைவினை யாரத்தமென்று
மூன்றுவகையான வினைத்தொகையனைத்தும் * யானே
என்னையடைந்தோர்தமக்குக் கழிப்பதென்னுமரங்கர்
எதிராசா நீயிட்டவழக்கன்றோ? சொல்லாய் *
உன்னையல்லதறியாதயானிந்தவுடம்போ
டுழன்று வினைப்பயன் பொசிக்க வேண்டுவதொன்றுண்டோ *
என்னுடைய விருவினையை யிறைப்பொழுதில்மாற்றி
ஏராரும்வைகுந்தத் தேற்றிவிடாய்நீயே. (௩௪)

அருளாலேயடியேனை யபிமானித்தருளி
அநவரதமடிமைகொள்ளநினைத்துநீயிருக்க *
மருளாலே புலன் போகவாஞ்சைசெய்யுமென்றன்
வல்வினையைமாற்றி யுன்பால் மனம்வைக்கப்பண்ணாய் *
தெருளாரும் கூரத்தாழ்வானு மவர்செல்வத்
திருமகனார்தாமு மருளிச்செய்த * தீமைத்
திரளானதித்தனையும் சேரவுள்ளவென்னைத்
திருத்தியுய்யக்கொள்ளும்வகைதேருமெதிராசா. (௩௫)

(நேரிசைவெண்பா.)

வாதனையிலூற்றமோ மாளாத வல்வினையோ *
ஏதென் றறியே னெதிராசா * - தீதாகும்
ஐம்புலனி லாசையடியேன் மனந்தன்னை *
வன்புடனே தானடரும் வந்து. (௩௬)

இன்றளவு மில்லா வதிகாரம் * மேலுமெனக்
கென்றுளதாம் சொல்லா யெதிராசா *-குன்று

வினைத்தொடரை வெட்டிவிட்டு * மேலைவைகுந்தத்
தெனைக்கடுகவேற்றாத தென்! (௩௭)

அஞ்சிலறியாதா ரைம்பதிலும் தாமறியார் *
என்சொ லெனக்கோ வெதிராசா * - நெஞ்சம்
உனதா ளொழிந்தவற்றையேயுகக்க * இன்னும்
அநுதாப மற்றிருக்கையால். (௩௮)

வேம்பு கறியாக விரும்பினார்கைத்ததென்று *
தாம்பொகடாதேபொசிக்கும் தன்மைபோல் * - ஈம்பனிவ
னென்று வினைத்தென்னையிகழா தெதிராசர் *
அன்றறிந் தங்கீகரிக்கையால். (௩௯)

அவத்தே பொழுதை யடியேன் கழித்து * - இப்
பவத்தே யிருக்குமது பண்போ * - திவத்தேயான்
சேரும்வகையருளாய் சீராரெதிராசா! *
போருமினி யிவ்வுடம்பைப்போக்கு. (௪௦)

எனைப்போல் பிழைசெய்வா ரிவ்வுலகிலுண்டோ? *
உனைப்போல் பொறுக்கவல்லா ருண்டோ? * - அனைத்துலகும்
வாழப்பிறந்த வெதிராச மாமுனிவா! *
ஏழைக்கிரங்கா யினி. (௪௧)

ஐம்புலன்கள்மேலிட் டடரும்பொழுதடியேன் *
உன்பதங்கள்தம்மைநினைந் தோலமிட்டால் * - பின்பவைதாம்
என்னையடராமலிரங்கா யெதிராசா *
உன்னையல்லாதா ரெனக்குண்டோ? (௪௨)

இந்தவுலகிற் பொருந்தாமை யேதுமில்லை *
அந்தவுலகிற்போக வாசையில்லை * - இந்தமனக்
கெப்படியோதான் தருவ தெந்தையெதிராசர் *
ஒப்பில் திருநாட்டை யுகந்து. (௪௩)

மாகாந்தநாரணனார் வைகும் வகை யறிந்தோர்க்கு
ஏகாந்தமில்லை யிருளில்லை * - மோகாந்தர்
இவ்விட மேகாந்த மிருளென்று * பயமற்றிருந்து
செய்வர்கள் தாம் பாவத்திறம். (௪௪)

நாராயணன்திருமால் நாரம்நாமென்னுமுறவு * -
ஆராயில்நெஞ்சே யநாதியன்றோ * - சீராரும்

ஆசாரியனுலேயன்றோ நாமுய்ந்ததென்று *
கூசாம லெப்பொழுதும்கூறு. (சரு)

திருவாய்மொழிப்பிள்ளை தீவினையோந்தம்மை *
குருவாகி வந்துய்யக்கொண்டு * - பொருவில்
மதிதானளித்தருளும் வாழ்வன்றோ? நெஞ்சே! *
எதிராசர்க் காளானேம்யாம். (சசு)

(கட்டளைக்கலித்துறை.)

இராமாநுஜாயநமவென் றிரவும் பகலும்சிந்தித்து * -
இரா மாநுசர்களிருப்பிடந் தன்னி லிறைப்பொழுதும் *
இரா மாநுசரவர்க்கெல்லாவடிமையுஞ் செய்யவெண்ணி *
இரா மாநுசர்தம்மை மாநுசரா வென்கொலெண்ணுவதே. (சஎ)

எண்ணுதென்னெஞ்ச மிசையாதுநா இறைஞ்சாதுசென்னி *
கண்ணுனவை யொன்றும்காணலுறு * கலியார்நலிய
வொண்ணுதவண்ண முலகளித்தோனெதிராசனடி
நண்ணுதவரை * அரங்கேசர் செய்த நலம்நமக்கே. (சஅ)

நந்தாநரகத் தழுந்தாமை வேண்டிடில் நானிலத்தீர் *
எந்தாதையான வெதிராசனைநண்ணும் * என்று மவ
னந்தாதிதன்னை யநுசந்தியு மவன்தொண்டருடன் *
சிந்தாகுலம்கெடச் சேர்ந்திரும் முத்திபின்சித்திக்குமே. (சகூ)

அவத்தே யருமந்த காலத்தைப்போக்கி * அறிவின்மையால்
பவத்தே யுழல்கின்ற பாவியர்காள்! * பலகாலம்நின்று
தவத்தே முயல்பவர்தங்களுக்கு மெய்தவொண்ணுத * அந்தத்
திவத்தேயும்மைவைக்கும் சிந்தியும்நீ ரெதிராசனைன்றே. (ருO)

என்றுளனிச னுயிருமன்றேயுண் டிக்காலமெல்லாம் *
இன்றளவாகப் பழுதே கழிந்த திருவினையால் *
என்னளவின்றி யிருக்குமென்னெஞ்ச மிரவுபகல்
நின்றுதபிக்கும் * எதிராசா நீ யருள்செய்தபின்னே. (ருக)

(நேரிசைவெண்பா.)

கனககிரிமேல் கரியமுகில் போல *
வினதை சிறுவன்மேற்கொண்டு - தனுவிடும்போது *
ஏராரரங்க ரெதிராசர்க்காக * என்பால்
வாராமுன்னிற்பர் மகிழ்ந்து. (ருஉ)

(எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

இதத்தாலேதென்னரங்கர் செய்கிறதென்றறிந்தே
யிருந்தாலும் தற்காலவேதனையின் கனத்தால் *
பதைத்தா! வோ! என்னு மிந்தப்பாவவுடம்புடனே
பலகோவுமநுபவித் திப்பவத்திருக்கப்போமோ! *
மதத்தாலே வல்வினையின் வழியுழன்று திரிந்த
வல்வினையேன்றன்னை யுனக்காளாக்கிக்கொண்ட *
இதத்தாயும் தந்தையுமா மெதிராசா என்னை
இனிக்கடுகவிப்பவத்தினின்று மெடுத்தருளே. (ருங)

(கட்டளைக்கலிப்பா.)

இன்னமெத்தனை நாளிந்தவுடம்புடன்
இருந்து கோவுபடக்கடவேனையோ! *
என்னையிதினின்றும் விடுவித்து நீர்
என்றுதான்திருநாட்டிலுளேற்றுவீர்? *
அன்னையுமத்தனு மல்லாதசுற்றமும்
ஆகியென்னையளித்தருள்நாதனே! *
என்னிதத்தை யிராப்பகலின்றியே
ஏகமெண்ணுமெதிராசவள்ளலே! (ருச)

(எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.)

தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப்பெற்றோம்
திருவரங்கத் திருப்பதியே யிருப்பாகப்பெற்றோம் *
மன்னியசீர்மாறன்கலை யுணவாகப்பெற்றோம்
மதுரகவிசொற்படியே நிலையாகப்பெற்றோம் *
முன்னவராம்நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம்
முழுதும்நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம் *
பின்னையொன்றுதனில் நெஞ்சுபோகாமல் பெற்றோம்
பிறர்மினுக்கம்பொறாமையில்லாப் பெருமையும்பெற்றோமே. ()

(நேரிசைவெண்பா.)

உன்றனபிமானமே யுத்தாரகமென்று *
சிந்தைதெளிந்திருக்கச் செய்தநீ * - அந்தோ!
எதிராசா! நோய்களா லென்னைநலக்காமல் *
சதிராக நின்திருத்தாள் தா. (ருகூ)

தேசிகர்கள் போற்றும் திருவாய்மொழிப்பிள்ளை *
வாசமலர்த்தாளடைந்த வத்துவென்று * - நேசத்தால்
என்பிழைகள் காணு வெதிராசரோ * அடியேன்
புன்பகர்வைக் கேளும் பொறுத்து. (௫எ)

எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால் *
உன்றனுறவையுணர்த்தியபின் * - இந்தவுயிர்க்
கெல்லாவுறவும் நீயென்றே யெதிராசா *
நில்லாத துண்டோ வென்னெஞ்சு. (௫அ)

எந்தைதிருவரங்க ரேரார்கருடன்மேல் *
வந்துமுகங்காட்டி வழிநடத்த * - சிந்தைசெய்திப்
பொல்லாவுடம்புதனைப் போக்குவதெந்நாள்கொலோ? *
சொல்லா யெதிராசா சூழ்ந்து. (௫௯)

இந்தவரங்கத் தினிதிருநீ யென்றரங்கர் *
எந்தை யெதிராசர்க் கிந்தவாம் * - சிந்தைசெய்யில்
நம்மதன்றோ நெஞ்சமே * நல்தாதை சொம்புதல்வர்
தம்மதன்றோ தாயமுறைதான். (௬0)

---

அடிவரவு.

வாழி இராமாநுசாய தந்தை இந்த தன்புதல்வன் வேம்புமுற்ற அன்னை தன்குழவி கூபத்தில் பூமகள் உன்னைத் தேச மெதிராசன் அதிகாரம் எம்பெருமானார் ஆகாத பொல்லாங்கு என்று அல்லும் பேரம்வழி திருமலை நீதற்ற அடியார்கள் இந்தவுடல் என்று கிரோதகம் தென்னரங்கர் இவ்வுலகில் பண்டு பல சாருவாக சீராரும் அறுசமயச் சங்கர இன்னமெத்தனை முன்னைவினை அருளாலே வாதனையில் இன்றளவும் அஞ்சில் வேம்புசுறி அவத்தே எனைப் போல் ஐம்புலன் இந்தவுலகு மாகாந்த நாராயணன் திருவாய்மொழிப்பிள்ளை இராமாநுசாய எண்ணுதென் கந்தா அவத்தே என்றுனன் கனகிரி இதத்தாலே இன்னமெத்தனைநாள் தென்னரங்கர் உன்றனபிமானம் தேசிகர்கள்போற்றும் எந்தைதிருவாய்மொழிப்பிள்ளை எந்தைதிருவரங்கர் இந்த.

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

ஆர்த்திப்ரபந்தம் ஸம்பூர்ணம்.

---

அருளாளப்பெருமா னெம்பெருமானு ரருளிச்செய்த

# ஞானஸாரமும்,

மணவாளமாமுனிகள் சேர்த்தருளின

## ஜ்ஞாநஸாரஶ்லோகங்களும்.

### தனியன்.

சுருளார்கருங்குழல் தோகையர் வேல்விழியில்துவளும் *
மருளாம்வினைகெடும்மார்க்கம்பெற்றேன் * மறைநான்குமசொன்ன
பொருள்ஞானஸாரத்தைப் புந்தியில் தந்தவன் * பொங்கொளிசேர்
அருளாளமாமுனியம் பொற்கழல்களடைந்தபின்னே.

---

ஊனவுடற்சிறைநீத் தொண்கமலை கேள்வனடித் *
தேனுகருமாசைமிகு சிந்தையராய் * - தானே
பழுத்தால் விழும் கனிபோல் பற்றற்று வீழும் *
விழுக்காடே தானருளும்வீடு. (க)

సనత్కుమారసంహితాయామ్, — యదాపరానన్యయిభి ర్దుశ్శకస్సృతిభిర్వినా। తేనతత్ప్రతతఃపాత స్సాప్రపత్తి స్తదాభవేత్॥

நரகும்சுவர்க்கமும் நாண்மலராள்கோனைப் *
பிரிவும்பிரியாமையுமாத் - துரிசற்று *
சாதகம்போல் நாதன்றனதருளேபார்த்திருத்தல் *
கோதிலடியார் குணம். (உ)

రామా-అయో-౩౦-౧౮=యస్త్వయాసహసస్వర్గో నిరయోయస్త్వయావినా। ఇతిజానన్ పరాంప్రీతిం గచ్ఛరామమయాసహ ॥ ప్రపన్నశ్చాతకోయద్వత్ప్రపత్తవ్యః కపోతవత్ । రక్ష్యరక్షకయోరేత ల్లక్ష్యంలక్షణమేతయోః॥

ஆனையிடர்கடிந்தவாழியங்கையம்புயத்தாள் *
கோனைவிடில் நீரில்குதித்தெழுந்த - மீனெனவே *
ஆக்கைமுடியும்படிபிறத்தலன்னவன்தாள் *
நீக்கமிலாவன்பர் நிலை. (௩)

రామా-అయో-౫౩-౩౧=నచసీతాత్వయాహీనా నచాహమపిరాఘవ। ముహూర్తమపిజీవావో జలాన్మత్స్యావివోద్ధృతౌ॥

மற்றொன்றை யெண்ணாதே மாதவனுக்காட்செயலை *
உற்றதிதுவென்றுளந்தெளிந்து * - பெற்ற

பெரும்பேற்றின்மேலுளதோ பேறென்றிருப்பார் *
அரும்பெறு வானத்தவர்க்கு. (௪)

శ్రీశాస్త్రే=యే బ్రహ్మన్ భగవద్దాస్య భోగైకనిరతాస్సదా । తే ప్రియా అతిథయః ప్రోక్తాస్త్రైలోక్యనివాసినామ్॥

தீர்த்தமுயன்றாடுவதும் செய்தவங்கள்செய்வனவும்*
பார்த்தனைமுன் காத்தபிரான் பார்ப்பதன்முன் *-சீர்த்துவரை
மன்னனடியோமென்னும்வாழ்வு நமக்கீந்ததற்பின். *
என்னகுறைவேண்டு மினி. (௫)

శ్రీవిష్ణుధర్మే.=తావద్గచ్ఛేత్తు తీర్థాని సరితశ్చ సరాంసి చ । యావన్నాభ్యేతి భూపాల విష్ణుభక్తిపరం మనః ॥ ఇతిహాససముచ్చయే.=కిం తస్య దానైః కిం తీర్థైః కిం తపోభిః కిమధ్వరైః । యో నిత్యం ధ్యాయతే దేవం నారాయణమనన్యధీః॥

புண்டரிகை கேள்வனடியார் * அப்பூமிசையோ
னண்டமொருபொருளாவாதரியார் * - மண்டி
மலங்கவொருமீன் புரண்ட மாத்திரத்தால் * ஆர்த்துக்
கலங்கிடுமோமுந்நீர்க்கடல். (௬)

బ్రహ్మాండమండలీమాత్రం కిం లోభాయ మనస్వినః । శఫరీస్ఫురితేనాబ్ధిః క్షుబ్ధో నైవ జాయతే ॥ (భాగవ-౧౦-౨౦-౧౫.—గిరయో వర్షధారాభిర్హన్యమానా న వివ్యథుః। అభిభూయమానా వ్యసనైర్యథాధోక్షజచేతసః॥)

தோளார் சுடர்த்திகிரி சங்குடைய சுந்தரனுக்
காளானார் * மற்றொன்றிலன்புசெய்யார் * - மீளாப்
பொருவரிய விண்ணாட்டில் போகம் நுகர்வார்க்கு *
நரகன்றோ விந்திரன்றன் நாடு. (௭)

బ్రహ్మాండపురాణే.=తత్పదం ప్రాప్తుకామా యే విష్ణోస్తేషాం మహాత్మనామ్ । భోగాః పురన్దరాదీనాం తే సర్వే నిరయోపమాః॥

முற்றப்புவனமெல்லா முண்டமுகில்வண்ணன் *
கற்றைத்துழாய்சேர் கழலன்றி * - மற்றொன்றை
யிச்சியாவன்பர் தனக்கெங்ஙனேசெய்திடினும் *
உச்சியாலேற்குமுகந்து. (௮)

భార-మో-౧౭౯=యాః క్రియాస్సంప్రయుక్తాస్స్యురేకాన్తగతబుద్ధిభిః । తాస్సర్వాశ్శిరసా దేవః ప్రతిగృహ్ణాతి వై స్వయమ్॥

ஆசிலருளா லனைத்துலகம் காத்தளிக்கும் *
வாசமலராள்மணவாளன் * தேசுபொலி

விண்ணாட்டில் சாலவிரும்புமே * வேறொன்றை
யெண்ணாதார் நெஞ்சத்திருப்பு. (௯)

యేஉనన్యమనసశ్శుద్ధాః యేదాస్యైకమనోరథాః। తేషాంమే హృదయంవిష్ణో ర్వైకుంఠాత్పరమంపదమ్॥

காருருவலகைகவிகின்ற வாளரக்கன் *
தோளும்தலையும் துணித்தவன்றன் - தாளில்
பொருந்தாதாருள்ளத்துப் பூமடந்தை கேள்வன்
இருந்தாலும் * முள்மேலிருப்பு. (௧0)

బ్రహ్మాండపురాణే.=భగవచ్చరణద్వన్ద్వే భక్తిర్యేషాం నవిద్యతే । తేషాంహృది స్థితోదేవః కంటకాగ్రఇవస్థితః॥

தன்பொன்னடியன்றி மற்றொன்றில் தாழ்வுசெய்யா *
அன்பருகந்திட்டதணு வெனினும் * -பொன்பிறழும்
மேருவாய்க்கொள்ளும் விரையார்துழாயலங்கல் *
மாரிமாக்கொண்டல் நிகர்மால். (௧௧)

పౌష్కరసంహితాయామ్.=భక్తైరణ్వప్యుపానీతం ప్రేమ్ణాభూర్యేవమేభవేత్। భూర్యప్యభక్తోపహృతం నమేతోషాయకల్పతే॥ (భ-గీ-౯-౨౬.=పత్రంపుష్పంఫలం తోయం యోమేభక్త్యాప్రయచ్ఛతి । తదహంభక్త్యుపహృత మశ్నామిప్రయతాత్మనః॥ భార-ఉద్యో-౮౯-౧౩.=అన్యత్పూర్ణాదపాంకుంభా దన్యత్పాదావనేజనాత్ । అన్యత్కుశలసంప్రశ్నాత్ నచేచ్ఛతిజనార్దనః॥)

யாருயிரீணைந்த மருந்தமிறத்தவழ்ந்த *
செந்தாமரைக்கண் சேவடியை * - வேறாக
வுள்ளாதாரொண்ணிதியை யீந்திடினும் * தானுகந்து
கொள்ளான் மலர்மடந்தைகோன். (௧௨)

పృథివీంరత్నసంపూర్ణాం యఃకృష్ణాయప్రయచ్ఛతి । తస్యాప్యన్యమనస్కస్య సులభోనజనార్దనః॥

பண்டேயுயிரனைத்தும் பங்கயத்தாள்நாயகற்கே *
தொண்டாமெனத் தெளிந்த தூமனத்தார்க்கு * உண்டோ
பலகற்றும் தம்முடம்பைப் பார்த்தபிமானிக்கும் *
உலகத்தவரோடுறவு. (௧௩)

வில்லிபுத்தூர்ப் பகவார்வார்த்தை.=విష్ణుదాసావయంయూయంబ్రాహ్మణావర్ణధర్మిణః । అస్మాకందాసవృత్తీనాం యుష్మాకంనాస్తిసంగతిః ॥ నాస్తిసంగతిరస్మాకంయుష్మాకఞ్చపరస్పరమ్ । వయమ్మకింకరావిష్ణోః యూయమిన్ద్రియకింకరాః ॥ అద్యప్ర

భృతిహీలోకాః యూయం యూయం వయంవయమ్ । అర్థకామపరాయూయంనారా యణపరావయమ్ ॥ (అవిద్యఃప్రాకృతఃప్రోక్తః వైద్యోవైష్ణవఉచ్యతే । అవిద్యేననకే నాపి వైద్యఃకిఞ్చిత్సమాచరేత్ ॥)

பூதங்களைந்தும் பொருந்துடலிற்பிறந்த *
சாதங்கள் நான்கினொடும் சங்கதமாம் * பேதங்கொண்
டென்னபயன்பெறுவீர் * எவ்வுயிர்க்குமிந்திரைகோன்
தன்னடியே காணும் சரண். (கச)

పరస్మైకాన్తిధర్మే.—దేహాత్మజ్ఞానకార్యేణ వర్ణభేదేనకింఫలమ్ । గతిస్సర్వాత్మనాం శ్రీమన్నారాయణపదద్వయమ్॥

குடியுங்குலமுமெல்லாம் கோகனகைகேள்வ
னடியார்க்கு - * அவனடியேயாகும் * - படியின்மேல்
நீர்கெழுவுமாறுகளின்பேரும்நிறமுமெல்லாம் *
ஆர்கலியைச்சேர்ந்திடமாய்ந்தற்று. (கரு)

పరస్మైకాన్తిధర్మే.— ఏకాన్తీవ్యపదేష్టవ్యో నైవగ్రామకులాదిభిః । విష్ణునా వ్యపదేష్టవ్య స్తస్యసర్వంసఏవహి ॥ నద్యాస్తస్యైవనామాని ప్రవిష్టాయాయథార్ణవమ్। సర్వాత్మనాప్రపన్నస్య విష్ణుమేకాన్తినస్తథా॥

தேவர்மனிசர் திரியக்குத்தாவரமாம் *
யாவையுமல்லே னிலகுமுயிர் * பூவின்மிசை
ஆரணங்கின் கேள்வ னமலனறிவேவடிவாம் *
நாரணன்தாட்கே யடிமைநான். (கசா)

నాహందేవోనమర్త్యోవా నతిర్యక్స్థావరోపివా । జ్ఞానానన్దమయస్త్వాత్మా శేషోహిపరమాత్మనః ॥ (నాహంవిప్రోనచనరపతి ర్నాపివైశ్యోనశూద్రో నోవావర్ణీ నచగృహపతి ర్నోవనస్థోయతిర్వా । కిన్తు శ్రీమద్భువనభవనస్థిత్యపాయైకహేతో ర్లక్ష్మీభర్తుర్నరహరితనోర్దాసదాసస్యదాసః॥)

ஒன்றிடுகவிண்ணவர்கோன் செல்வ மொழிந்திடுக *
என்று மிறவாதிருந்திடுக * - இன்றே
யிறக்கக்களிப்பும் கவர்வும்* இவற்றால்
பிறக்குமோ தற்றெளிந்தபின். (கஎ)

అగచ్ఛతుసురేన్ద్రత్వం నిత్యత్వంవాద్యవామృతిః । తోషంవాఽత్రవిషాదంవా నైవగచ్ఛన్తిపణ్డితాః॥

ஈனமிலாவன்ப ரொன்றானு மெய்திலா
மானிடனா * எல்லாவண்ணத்தாலும் * தானறிய

விட்டார்க்கெளியன் விடாதார்க்கறவரியன் *
மட்டார்துழாயலங்கல் மால். (கஅ)

భక్తోపివాసుదేవస్య శార్జిణః పరమాత్మనః । లోకేషణావినిర్ముక్తో ముక్తో భవ నాన్యథా॥

நல்லபுதல்வர் மனையாள் நவையில்கிளை *
இல்லம்நிலம் மாடிவையனைத்தும் * அல்லலெனத்
தோற்றியெரிநீயிற்சுடுமேல் * அவர்க்கெளிதாம்
ஏற்றரும்வைகுந்தத்திருப்பு. (க௯)

బ్రహ్మాణ్డపురాణే-శ్రీహస్తిగిరిమాహాత్మ్యే= క్షేత్రాణిమిత్రాణిధనానినాథ పుత్రాశ్చదారాఃపశవో గృహాణి । త్వత్పాదపద్మప్రవణాత్మవృత్తేర్భవన్తిసర్వే ప్రతికూలరూపాః

விருப்புறினும் தொண்டர்க்கு வேண்டுமிதமல்லால்
திருப்பொலிந்தமார்பனருள் செய்யான் * - நெருப்பை
விடாதேகுழவிவிழ வருந்தினும் *
தடாதேயொழியுமோ தாய் (உ0)

యాచితోపిసదాభక్తైర్నాహితంకారయేద్ధరిః । బాలమగ్నౌపతన్తంతు మాతా కింననివారయేత్॥

ஆரப்பெருந்துயரே செய்திடினுமன்பர்கள்பால் *
வேரிச்சரோருகைகோன் மெய்ந்நலமாம் - தேரில் *
பொறுத்தற்கரிதெனினும் மைந்தனுடற்புண்ணை
அறுத்தற்கிசை தாதையற்று. (உக)

హరిర్దుఃఖాని భక్తేభ్యో హితబుద్ధ్యాకరోతివై । శస్త్రక్షారాగ్నికర్మాణి స్వపుత్రాయయథాపితా॥

உடைமைநானென்று முடையானுயிரை *
வடமதுரைவந்துதித்தானென்றும் * திடமாய்
அறிந்தவன்றன் தாளிலடைந்தவர்க்குமுண்டோ
பிறந்து படும் நீள்துயரம் பின். (உஉ)

శ్రీవిష్ణుధర్మే=స్వత్వమాత్మనిసంజాతం స్వామిత్వంబ్రహ్మణిస్థితమ్। ఉభయోరేష సమ్బన్ధో నపరోఽభిమతోమమ॥

ஊழிவினைக் குறும்பர் ஓட்டருவரொன்றஞ்சி
ஏழைமனமே யினித்தளரேல் * - ஆழிவண்ணன்
தன்னடிக்கீழ் வீழ்ந்து சரணென்றிருந்தொருக்கால் *
சொன்னதற்பினுண்டோ துயர் (உ௩)

శ్రీముకున్దమాలాయామ్ — మాభీర్మన్దమనోవిచిన్త్యబహుధాయామీశ్చిరంయాతనా నామీనః ప్రభవన్తిపాపరిపవ స్స్వామీననుశ్రీధరః । ఆలస్యంవ్యపనీయభక్తిసులభం ధ్యాయస్వనారాయణం లోకస్యవ్యసనాపనోదనకరో దాసస్యకింనక్షమః॥

வண்டுபடி துளபமார்பனிடைச் செய்தபிழை
உண்டுபலவென்றுளந்தளரேல் * - தொண்டர்செயும்
பல்லாயிரம் பிழைகள்பார்த்திருந்தும் * காணுங்கண்
இல்லாதவன்காணிறை. (௨௪)

అవిజ్ఞాతాహిభక్తానా మాగస్సుకమలేక్షణః । సదాజగత్సమస్తఞ్చ పశ్యన్నపి హృదిస్థితః॥

அற்றமுனாக்கி லடைந்தவர்பா லம்புயைகோன் *
குற்றமுணர்ந்திகழும் கொள்கையனோ? * எற்றே! தன்
கன்றினுடம்பின் வழுவன்றோ காதலிப்பது *
அன்றதனை யீன்றுகந்தவா. (௨௫)

ప్రపన్నాన్మాధవస్సర్వాన్ దోషేణ పరిగృహ్యతే । అద్యజాతంయథావత్సం దోషేణసహవత్సలా॥

தப்பில்குருவருளால் தாமரையாள்நாயகன்றன் *
ஒப்பிலடிகள் நமக்குள்ளத்து -வைப்பென்று *
தேறியிருப்பார்கள் தேசுபொலிவைகுந்தத்து - *
ஏறியிருப்பார் பணிகட்கேய்ந்து. (௨௬)

ఆచార్యస్యప్రసాదేన మమసర్వమభీప్సితమ్ । ప్రాప్స్యామీతివిశ్వాసో యస్యాస్తిససుఖీభవేత్,

நெறியறியாதாரு மறிந்தவர்பால் சென்று *
செறிதல் செய்யாத் திமனத்தர்தாமும் * - இறையுரையைத்
தேறாதவரும் * திருமடந்தைகோனுலகத்
தேறா ரிடாழுந்துவார். (௨௭)

భగవద్గీతాయామ్-౪-౪౦=అజ్ఞశ్చాశ్రద్దధానశ్చ సంశయాత్మావినశ్యతి । నాయంలోకోస్తి నపరో నసుఖంసంశయాత్మనః॥

சரணாகதி மற்றோர்சாதனத்தைப் பற்றில் *
அரணாகா தஞ்சனைதன் சேயை * -முரணழியக்
கட்டியது வேறோர்கயிறுகொண்டார்ப்பதன்முன் *
விட்டபடைபோல விடும் (௨௮)

సనత్కుమారసంహితాయామ్ = ప్రపత్తేఃక్వచిదప్యేవం పరాపేక్షానవిద్యతే। సాహిసర్వత్రసర్వేషాం సర్వకామఫలప్రదా ॥ సకృదుచ్చారితాయేన తస్యసంసారనా

